பிஸ்மில்லாஹி.

# வைத்தியாமிர்த போதினி.

## முதற்பாகம்.

இஃது,

பாப்புராஜபுரம்.

பா-உ-குலாமுகைதீன்சாயபு அவர்களின்

வேண்டுகோளின்படி

கும்பகோணத்தைச்சார்ந்த கோவிந்தகுடி

கத்தீப் அமீன்சாஹிப் அவர்கள்குமாரர்களும்

சென்னை யூனானிவைத்தியசாலைத்தலைவர்களுமாகிய

ஹக்கீம் ஷைக்தாவூத் சாகிபு அவர்களாலும்

ஹக்கீம் முஹம்மது ஷம்ஷுத்தீன் சாகிபு

அவர்களாலும் இயற்றப்பட்டு,

ம-ா-ா-ஸ்ரீ, க வ-திருவேங்கடநாயடு

அவர்களால்,

ஒருவாறுபரிசோதிக்கப்பட்டு,

சென்னை சூளை,

ஸன் ஆப் இந்தியா பிறஸ்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1901.



இதின் விலை [redacted] 2-8-0     வி. பி. சார்ஜ் அணா 3.

## ரிஜிஸ்டர் அறிவிப்பு.

இதனால் அனைவருக்கும்தெரிவிப்பதியாதெனில், 1867 ம் வருஷத்து 25 வது ஆக்டின் 20-வது பிரிவிலுள்ள, 6-வது பாராவின் படி, இங்கிலீஷ் இலாகாவாகிய மதராஸில் இந்த வைத்தியாமிர்த போதினி என்னும்புத்தகம் காப்பிரயிட்ரிஜிஸ்ட்டர் செய்யப்பட்டிருக்கிறதுமன்றி, பிரெஞ்சு இலாக்காவாகிய புதுவையிலும் காரைக்காலிலுங்கூட ரிஜிஸ்ட்டர்செய்யப்பட்டிருப்பதால், இந்நூலை இந்தப் படியேயாவது வேறுபாஷையில் மொழிபெயர்த்தாவது இந்நூலாசிரியரின் அனுமதிபெறாமல் ஒருவரும் அச்சிடலாகாது. அவ்வாறச்சிடின், மேற்கூறிய ஆக்டில் சொல்லியிருக்கின்றபடி அதனாலுண்டாகும் நஷ்டத்தை அச்சிட்டவர்களிடத்திலிருந்து கோர்ட்டார் மூலமாய் வசூல் செய்யப்படும்.

இப்படிக்கு,

ஹக்கீம் ஷைக்தாவூத் சாகிபு.

## விளம்பரம்.

இப்புத்தகத்தின் டைடில்பேஜியில் இதனடியிற் கண்டிருக்கிற எம்முடைய பெயரை எமது கையெழுத்தாகவே எழுதப்பட்டிருக்கும். அவ்வாறு கையெழுத்தில்லாத புத்தகங்கள் மாறுபாடானவையென்றுநம்பப்படும். அவ்விதபுத்தகங்களைக் கண்டுபிடித்துக்கொடுப்பவர்களுக்கும், அப்புத்தங்களை விற்பனைசெய்வோரைக் காண்பிப்பவர்களுக்கும் தக்கவெகுமதி கொடுக்கப்படும்.

அதிவினோத அற்புதவல்லமைபொருந்திய ஜௌபல்நானக்நானக் சுந்தர்சரித்திரம் அழுதவர்சிறிக்கவும் சிறித்தவரழுகவும் கூடிய கதைஅச்சிட்டுவருகிறோம் கூடியசீக்கிரத்தில்வெளியாகும், “இதை படித்தால் வேறுகதையேன்,,

இப்புத்தகங்கள் வேண்டியவர்கள் கீழ்காணும்விலாசத்தாரிடம் பெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கு,

ஹக்கீம் ஷைக்தாவூத் சாகிபு அண்டு பிரதர்ஸ்.

யூனானிமெடிக்கல் ஹால் 106, சௌகார்பேட்டை,

சென்னை.

பிஸ்மில்லாஹி.

# சாற்றுகவி.

நாகூர்காதிருவொலி தாகா மஹாவித்துவசிகாமணி

## ஸ்ரீமத்-வா-குலாம்கா திருநாவலரவர்கள் இயற்றிய

கழிநெடிலாசிரியவிருத்தம்.

மருத்துவகைகுணங்குறிகள் வியாதிக்குள்ள
வகைதீர்க்கும்வகைநாடி வகைகளோடே
அருத்துவகையநுபா னுதிகளெல்லாந்தாம்
அடங்கியொருகண்ணாடி யதுபோற்காண
வருத்துவகையில்லாம லொருநூல்செய்து
வைத்தியாமிர்தபோ தினியென்றீந்தார்
கருத்துவகைக்கோவிந்த குடியில்வாழுங்
கதீபமீன்சாகிபருள் கருணைப்பாலர். 1

குற்றமகன்றிடவெவருங் கொண்டுபோற்றுங்
குடும்பசம்ரக்ஷணியா தியநூல்செய்த
முற்றவுணர்பண்டித பாஸ்கரனும்பண்பின்
முகம்மதுமிஜாமுகையதீன் மாமன்பாற்
கற்றவுயர்பண்டிதர் யூனானிசாஸ்த்ர
ஹகீம்சைகுதாவூது சாகிபும்பேர்
சற்றவன்பின்னோன முகம்மதுஷம்சுத்தீன்
சாகிபுமாம்பண்டித சாகரங்கடாமே. 2

---

மகாவித்வசிகாமணி

## நாகூர் ஸ்ரீமத் மு· செவத்தமரைக்காயர்

அவர்கள் இயற்றிய

நிலைமண்டிலவாசிரியப்பா.

மாவுலகத்துண் மேவுமன்பதைக்கு
முப்பிணியால்வரு மெய்ப்பிணியுங்கெடப்
புரியவல்ல புரைதீரௌடத
விரிவகையெல்லாம் விளக்கமுற்றிருப்பச்
சீவகாருண்யத் தேக்கம்பூண்டாங்

கோவறவெவரு மொருங்கினிதேற்ப
மாதினியன்ற வைத்தியாமிர்த
போதினியென்றவ பூர்வநூலொன்றைத்
தெள்ளியதமிழி னெள்ளியவசன
நடையியற்றித் தடையறவளித்தனர்
மாவிந்தைநிரம்புங் கோவிந்தக்குடியின்
கத்திபமீன்சாகிபா முத்தமர்தவத்தால்
வந்தவதரித்த நந்தனரானோர்
விதுசிகர்ஹக்கீம் முகம்மதுநிஜாமுத்தீன்
சாகிபென்றோங்கிய வாகினரிடத்திற்
பல்கலைபயின்ற வொல்கலகன்றோர்
விழைப்பமலர்ந்த வொழுக்கமிக்குள்ளோர்
மருத்துவநூனெறி வழாமலெவர்க்குந்
திருத்தகுசிகிச்சை செயுந்திறம்வாய்ந்தோர்
தண்பொழிற்சென்னை லவுக்கார்பேட்டைக்
கண்பொலிமெடிகல் ஹால்நிலைநிறுத்தினோர்
முத்திமார்க்க முறைபலதெரிந்தோர்
எத்திசையும்பெய ரிலகப்பெற்றோர்
தகைஹக்கீம்செய்கு தாவூதுசாகிபு
தகைபடுமன்னோர் சகோதரரான
கான்கெழுஹக்கீம் முகம்மதுஸம்ஷாத்
தீன்சாகிபாகிய செம்மலர்தாமே.

---

மாஜி சென்னை

இந்துஜனபூஷணி பத்திராசிரியரும்,

சென்னை விக்டோரியாஜூபிலிபிரஸ் புரொப்ரைட்டருமாகிய

ம-ா-ா-ஸ்ரீ, திருமயிலை

வி. சுந்தரமுதலியாரவர்களால் இயற்றிய

ஆசிரியப்பா.

உலகெலாம்படைத்த வொருமுதற்கடவுள்
அலகிலாவுயிரி லதிசிறப்பினராய்
மானவர்தம்மை வகுத்துளமாண்பால்

ஞானமாதி நலத்தகுகுணங்கள்
அதிகமாக்கொண்ட வரும்பெறன்மக்கள்
இதமுறுயாக்கை யெய்தியநம்மனோர்
இல்லறவொழுக்கி னிசைவுறநடந்து
நல்லனபுரிந்து நமையளித்தருளும
நிரந்தரனிமல னிகரிலாப்பெரியோன்
பரம்பரனடியிற் பத்திசெய்துய்வான்
இவ்வுடலோம்பற் கேதுவாமிதற்குத்
தெவ்வரினியன்ற தெறும்பிணிபலவால்
அன்னவைகருவி லமைந்துவாணாளில்
இன்னல்செய்தவனை யிக்குறைவகற்றி
யின்புற்றுயிர்க ளிப்புவிவாழ்வதற்
கன்புற்றுளத்தி லருமுயற்சியினால்
பலவளஞ்செறிந்த பாபுராஜபுரத்
திலகுறவர்ந்த விசைசாலறிவோன்
அகந்தெளிவுற்ற வாயுணூல்வல்ல
முகம்மதுநிஜா முதீனென்னும்
நாடருந்திறத்து நற்குருராயன்
சீடர்களாகித் தெளிவுறக்கற்றோர்
தாவினல்வளத்துத் தஞ்சையம்பதிவாய்க்
கோவிந்தக்குடி குலவுறவாழ்வோர்
தகுசீர்ஹக்கீம் ஷைகதாவூதும்
முகமத்ஷமஷதீன் மூதறிவினனும்
மாதிறத்தொருநூல் வைத்தியாமிர்த
போதினியென்னப் பொதுநலத்துதவினர்
இத்தகுபெயரி னிலங்குறுசீர்சால்
உத்தமநூலிவ் வுலகிலோங்குகவே.

"சென்னை நபவிய்யா உயர்சங்கத்தின்"
மானேஜரும், கீர்த்தனலங்கிருதத்தின் சங்கீதகர்த்தருமாகிய
**ம-௱-௱-ஸ்ரீ, கு. முகம்மது ஜமாலுத்தீன்சாகிபு**
**அவர்களியற்றிய**
அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பார்கொண்ட பன்னாட்டின் முன்னாட்டுந் தென்னாட்டிற்
பகருமேன்மை
யேர்கொண்ட மன்பதைமற் றின்னறவிர்ந் தோங்குபய
னெய்து வண்ண
நேர்கொண்ட தண்ணளியாற் செந்தமிழின் மருத்துமுறை
நிலைப்பக் காட்டிச்
சீர்கொண்ட வைத்தியா மிர்தபோ னியெனுநூற்
சிறப்பி னீந்தார். (1)

கொங்குலவை வீசுவனக் குடந்தையைச்சார் கோவிந்தக்
குடியி னன்ற
தங்குபுகழ் கத்திபு பட்டமுறு நல்லமீன்
சாகி பண்ணல்
பொங்குதவப் புதல்வரகீம் செய்குதா வூதென்னும்
புநித னோடு
மங்குனிகர் காத்தக்கீம் செய்குஷம்சுத்தீ னென்றிரு
மகிபர் மாதோ. (2)

வெண்பா

இப்புவியில் வாழ்க்கை யிதம்பயக்கு மென்றொன்று
முப்பிணிகள் பாற முனைந்தகற்று மொப்புகவாய்க்
கொற்ற மருத்துவநூற் கூறுமிந்தப் போதினிதற்
கற்றெழுகு நர்க்கினிது காண் (3)

---

**ம-௱-௱-ஸ்ரீ, பாலையூர் வைத்தியநாத அய்யர் அவர்கள்**
முனிசிபல் றிவின்னியூ இன்ஸ்பெக்டர் அவர்களால்
கொடுக்கப்பட்ட ஸர்டிபிகேட்டு.

ம-௱-௱-ஸ்ரீ, ஹக்கீம்ஷைக்தாவூத்சாகிபு அவர்களுக்குசலாம்செய்து எழுதிக்கொண்டது.

என்னுடைய சரீரமானது மெத்தவும்மெலிந்து அசக்தமாயும் இரத்தமேயில்லாமலும் போனதைத் தங்களுக்குயான்தெரிந்துக்கொள்ள ஆண்டவன் கொடுத்திருக்கப்பட்டயுக்தி புத்தியைக்கொண்டு தாங்கள் அவுஷதங்கொடுத்து இரண்டுவாரங்களில் சௌக்கியஞ் செய்து விட்டீர்கள். அதற்காகத்தங்களுக்குப் பிரதிபிரயோஜனம் எவ்

வளவுசெய்தாலும் தாங்குமே, தங்களால் இப்பொழுது அச்சிடப் பட்டிருக்கிற வைத்தியாமிர்தபோதினியென்னும் திவ்வியநாமத்தை யுடைய புஸ்தகத்தின்உபயோகத்தை ஆயிரம்வாக்குள்ள ஆதிசேட னாலும் அறையமுடியாது. ஏனென்றால் சாதாரணஜனங்கள் வாசி த்து அநுபவத்திற்குக் கொண்டுவரும்படியான எளியதமிழ் நடை யில் வசனமாய் செய்திருக்கின்றீர்கள். இந்த புஸ்தகத்தை வாங்கி வாசித்து அதிலுள்ள சாராம் சங்களையறிந்து அநுபவிக்கக்கொடுத்து வைக்காத குடும்பத்தின் தவுர்பாக்கியமே மிகபரிதாபப்படத் தகு ந்ததாயிருக்கும். விசேஷமாய் என்னசொன்னாலும் அதிகமல்ல சுருக்கமாய் சொல்லவேண்டியதாவது ஒவ்வொரு குடும்பத்திலுள்ள தலைவர்கள் தன்குடும்பத்திற்குச் சொத்துகளைச்சம்பாதித்துவைக்கக் கோருவதுபோல இந்தவைபித்தியாமிர்தபோதினியையும் வாங்கிக் கொடுக்கவேண்டும். மேலும்மேலும்லோகோபகாரமாக அநேகவை த்தியகிரந்தங்களை அச்சிடும்படி ஆண்டவன் தங்களுக்கு தேக சௌக்கியத்தையும்ஆயுளையும்கொடுப்பாரென்று நம்பியிருக்கிறேன்.

வேணுமசலாம்.

**பாலையூர். வைக்கியநாதஅய்யர்.**

றெவினியூ இன்ஸ்பெக்டர் மதிராஸ்முனிசிபாலிட்டி.

## ம-ா-ா-ஸ்ரீ, பி. கங்காதராஐய்யர். B. A.

அவர்களால்கொடுக்கப்பட்ட ஸர்டிபிகேட்டு.

ம-ா-ா-ஸ்ரீ, ஷைக்தாவூத் சாகிப் அவர்களுக்கு சலாம்செய்து எழுதிக்கொண்டது.

தங்களால் செய்திருக்கப்பட்ட வைத்தியாமிர்தபோதினி என் னும் புஸ்தகத்தில்அடங்கிய சங்கதிகள் ஜனங்களுக்கு வெகுஉபயோ கமானவைகள் அந்நூலை ஒவ்வொருகுடித்தனத்தின் தலைவர்களும் வாங்கி தமதுகுடும்பத்திலிருக்கும் புத்திசாலிகள் வாசித்து அறிந்து நடந்துகொள்ளும்படி செய்தால்தங்களால்பிரயாசப்பட்டுத்தேடியசெ ல்வப்பொருளைவிட அதிகப்பிரயோஜனத்தைஅடைவார்கள். நிரோக சரீரத்திற்கு மிஞ்சினசுகம் உலகத்தில்யாதொன்றுமில்லையாது. தங் களுடைய புஸ்தகமானது எளிதில் எல்லாச்ஜனங்களும்வாசித்து அ றிந்து அனுஷ்டிக்கும்படியான வசனநடையில் எழுதியிருக்கின்றது. மெத்த உபயோகமுள்ளது. அதனுடையகுணங்களைப்பற்றி எவ்வள வுதூரம் எழுதினாலும் அதிகமல்ல. இன்னும்விசேஷமாய் லோகோ பகாரமாக அநேகவைத்திய கிரந்தங்களைக் கூடியசீக்கிரத்தில் அச்சி ட்டு வெளியிடுவதற்குத் தங்களுக்குச்சரீரசௌக்கியத்தையும்ஆயுளை யும் ஆண்டவன்கொடுப்பான்யென்று நம்புகிறேன்.

இங்ஙனம் வேணும்சலாம்.

**பி. கங்காதரய்யர் B. A.**

பிஸ்மில்லாஹி.

# வைத்தியாமிர்தபோதினி.

## அவையடக்கம்.

### கலிவிருத்தம்.

கதிரிலங்கு வானினையுங் கடலினையு மளத்தற்கு
மதியுடையோ னொருமகனிங் குதித்திட்டால் வயித்தியநூ
லதிலமைந்த நுண்பொருளை யாராய லாகுமலாற்
புதியமதி யேனென்னைப் புகலுவது புவியீரே. 1

ஆழமறி யாக்கடலை யளப்பர்தமக் காமாறு
வேழமெனி னும்மதனை வேண்டியவா வணக்கிற்பர்
போழுமதி யேனுமன்ன போலவே வயித்தியத்துட்
காழகல முளள்சில்ல கழறிடவே துணிந்தனனால். 2

இல்லுறைவோர் தமக்காவ வானசில வியைத்திட்டு
நல்லுரையாய்க் கத்தியத்து னன்கினடை வித்ததற்குச்
சொலலமையும் வயித்தியா மிருதபோ தினியென்றே
யெல்விளங்கு பெயர்புனைந்தே னேவர்களு மதித்தேத்த. 3

கவிவாணர் குற்றமதைக் காணார்க ளென்காரு
மவியாத வவர்கருணை யாளரென்ப துலகறியும்
புவியாரு மிந்நூலைப் புறக்கணிக்கா ததனுள்ளாற்
சவியார்ந்த விஷயத்தைச் சார்ந்துவப்பர் தக்கோரே. 4

பிஸ்மில்லாஹி.

# வைத்தியாமிர்தபோதினி

## கடவுள் வாழ்த்து.

நேரிசை வெண்பா.

சீர்பெருகும் வைத்யா மிர்தபோ தினிசிறக்கப்
பேர்பெருகு நல்வளத்தைப் பேணியே-யேர்பெருகு
நல்லருளை யீய நலமாக வேண்டுவன்யான்
பல்வளத்தை யீவோற் பணிந்து.

அறுசீராசிரிய விருத்தம்.

செங்கையா னதியபழைத்த செய்யதுல் களைனென்போர்
மங்கள நபினுரெங்கள் மாமதியழைத்த வேந்தல்
திங்களைப் பிளந்தகோவின் செய்யதா மரைவணங்கிப்
பொங்குசீர் வைத்யமாங்கப் புகலுவன் போற்றித்தானே.

உத்தமரபூபக்கருமருதுமானலியைப்போற்றி
எத்தலஞ் ஜெயிக்குமென்ற னிறைத்திரு ஹசேனுசேனும்
பத்தினி மாதாவாவார் பத்திமாமலர்த்தா ளேத்திச்
சித்திவைத் தியமிக்கோங்கச் செய்குவன் வாழ்த்துமாதோ.

| இஃது தமிழ் அளவு. | |
|---|---|
| 3½-குண்டுமணிஎடை | 1-பணமெடை |
| 9-பணமெடை | 1-வராகனெடை |
| 1½ வராகனெடை | 1-களஞ்சி |
| 10-வராகனெடை | 1-பலம் |
| 1 ரூபாஎடை | 1 துலாம் |
| 8-பலமெடை | 1 சேர் |
| 13-பலம் அல்லது பௌன் | 1-இராத்தல் |
| 24 பலம் | 1-பக்காசேர் |
| 40 குண்டுமணிஎடை | 1-களிஞ்சி |

| இங்கிலீஷ் அளவு. | | | |
|---|---|---|---|
| 1 | கிரேன் | ½ | குன்றிமணியெடை |
| 1 | ஸ்குருபில் | 10 | ,, |
| 1 | டிராம் | 32 | ,, |
| 1 | ஔன்ஸ் | 8 | வராகனெடை |
| 1 | டிரிங்கு | 3 | வராகனெடை |
| 1 | பவுண்டு | 160 | வராகனெடை |
| 1 | காலன் | 128 | பலம் |

## ஔஷதங்கள் செய்யுமிடங்களாவன.

சுசிகரமானவீடு - அதாவது சுத்திபடுத்தியவீடு.
தெய்வஸ்தானம் - அதாவது கோவில்.
நிர்ஜ்ஜனப்ரேசம் - அதாவது ஜனமில்லாத இடம்.
நாலுபுறமும் படுதாபோட்டு இருக்கவேண்டும்.
இதுபோன்ற இடத்தில் மருந்துசெய்ய மனதிடமாகும்.

### கல்வங்களின் பேதங்கள்.

கறுப்புக்கல்வம். இதில் மருந்து அரைத்தால் ஆரோக்கியமும் பலமும் உண்டாகும்.

வெள்ளைக்கல்வம். இதில் பலம் குறைவாகும். மேலும் மருந்தின்பலத்தைப் போக்கடிக்கும்.

பச்சைக்கல்வம். மூன்றுதோஷமும் சமமாகும்.
சிவப்புக்கல்வம். மூன்றுதோஷமும் ஜனிக்கும்.
மஞ்சள்கல்வம். வியாதியை உண்டுபண்ணும்.

இவைகளையறிந்து ஔஷதம் செய்தால் நலமாகும். மருந்துயரைக்கும் மேற்கல்லைப் பிடித்துக்கொண்டு ஈசான்யமுகத்தி லுட்கார்ந்து (சர்வபரிபூரணதயாபரா) என்று தியானஞ் செய்துகொண்டு மருந்தைத் திட்டவேண்டியது.

### கஷாயம்குடிக்கும் பாத்திரங்களும் குடிக்குமுறையும்.

பொன் வெள்ளி மண் இதில்செய்த பாத்திரங்களில் கஷாயம் வார்த்துக் கடவுளைத்தியானித்துக்கொண்டு வியாதியஸ்னுக்குக்கொடுக்கக் குடித்தவுடன் நாலுதுளி கீழ்விழும்படி பாத்திரத்தைக்கவிழ்க்கவேண்டும்.

### ரோகிகளுக்கு மருந்துகொடுக்கும் காலநிர்ணயம்.

அசாத்தியரோகிகளுக்கு. உடனுக்குடன் கொடுக்கவேண்டும்.

சாதாரணரோகிகளுக்கு. உதயத்திலும் சாயந்திரத்திலும் கொடுக்கவேண்டியது.

பேதிவாந்திரோகிகளுக்கு. உதயத்தில் கொடுக்கவேண்டியது.

கலிகமிடுவதற்குச். சாயந்திரகாலமேதக்கது.

---

## அக்கினி இலக்ஷணங்கள்.

தீபாக்கினி இலக்ஷணம். ஒருசேர் தைலமென்றால் 8 - பலம் எனப்படும். இதை ஓர்கலசத்தில்வார்த்து எள்ளுப்பிரமாணம் பஞ்சுவத்திசெய்து எரிக்கவேண்டும். இது இரண்டங்குலம் உயரமாயெரிக்கவேண்டும். இதுபோலவே கட்டையால்யெரிக்கத் தீபாக்கினியென்றுசொல்லப்படும்.

கமலாக்கினி இலக்ஷணம். மேற்சொல்லிய அக்கினி போலவே செய்து தாமரைமொக்குபோல் ஆறு அங்குலம் உயரம் எரிக்க கமலாக்கினியென்று சொல்லப்படும்.

மந்தாக்கினி இலக்ஷணம். காட்டுக்கரியை நெருப்புச் செய்து வைப்பது மந்தாக்கினியென்று சொல்லப்படும்.

கடாக்கினி இலக்ஷணம். அடுப்புநிறைய வரட்டிகள் வைத்து மேற்பாத்திரத்துக்குக் கழுத்தளவும் அக்கினிசிகைவரும்படிஎரிப்பது காடாக்கினியென்று சொல்லப்படும்.

---

## புடங்களிடும் விவரம்.

மஹாபுடம். ஒருகெஜமாழமும் அகலமுமாகப் பள்ளம்வெட்டிக்காட்டுவரட்டியினாற் புடம்போடுவது மகாபுடமென்று சொல்லப்படும்.

கெஜபுடம். ஒன்றரைகெஜமாழமும் அகலமுமாகப் பள்ளம் வெட்டி புடம்போடுவது கெஜபுடமென்று சொல்லப்படும்.

வராஹபுடம். ஒருமுழமாழமும் அகலமுமாகப் பள்ளம்வெட்டி காட்டின்வரட்டி 100-சேர்த்துவைப்பது வராகபுடமென்று சொல்லப்படும்.

குக்கிடபுடம். ஒன்றேகாற்ஜாணழமும் ஒன்றேகாற்ஜாணகலமுமாகப் பள்ளம்வெட்டிக் காட்டுவரட்டி 50-சேர்த்துப் புடமிடுவது குக்கிடபுடமென்று சொல்லப்படும்.

கபோதபுடம். மேற்சொல்லிய குக்கிடபுடத்திற்கு போட்டவரட்டியில் மூன்றில் இரண்டுபங்கால் போடுவது.

பண்ணிபுடம். மூன்றுவரட்டி யினால்வைக்கும் புடத்திற்கு பண்ணிபுடமென்று சொல்லப்படும். இதற்கு முக்கால்ஜாண் ஆழமும் அகலமும் பள்ளம்வெட்டிப் புடமிடவும்.

கோபுரபுடம். வரட்டியைச்சூரணம்செய்து பூமிமீதுகொட்டியதில் ஔஷதம்வைக்கும் கையால் அமிக்கி புடமிடுவது கோபுரபுடமென்று சொல்லப்படும்.

தீபப்புடம். கையடுப்பிற்கீழே தீபம்வைத்து அவியாமல் எரிக்கிறது தீபப்புடமென்று சொல்லப்படும்.

சூரியபுடம். மருந்துகளை பாத்திரத்திலிட்டு வெய்யிலில் வைப்பது சூரியபுடமென்று சொல்லப்படும்.

பூமிபுடம். சீலேசெய்த பாத்திரங்கள் பூமியிற் புதைத்து வைப்பது பூமிபுடமென்றுசொல்லப்படும். இதற்கு ஒருமுழம் பள்ளம் வெட்டவேண்டியது.

தான்யபுடம். லேக்கியம் தைலம் இதைப்பக்குவமாய்ச் செய்துஅதைச் சிலநாள்வரைக்கும் தான்யத்தில் வைத்திருப்பதற்குத் தான்னியபுடமென்று சொல்லப்படும்.

கும்பபுடம். ஒருமண்குடத்தின் கீழ்ப்பாகத்தில் சுமார் அங்கலப்பிரமாணம் 50-தொளைசெய்து நிறையநெற்கொட்டி மருந்து வைக்கும் வாய்ப்புறத்தை அகலால்மூடி சீலைசெய்து அகலிலும்நெருப்பைப்போட்டு அடுப்பின்மீதுவைத்துச் சிறிதாகஎரிப்பது. இதற்குக் கும்பபுடமென்று சொல்லப்படும்.

மேற்சொல்லிய ஆறுபுடங்களிலும் மூசை அல்லது அகல் ஓடு இவற்றிற்குச்சீலைசெய்து பத்திரமாய் வரட்டிகுறையாமல் புடமிட்டு ஆறியபிறகு யெடுத்துக்கொள்ளவேண்டியது.

பூதப்புடம். மூசையில் ரசத்தைக்கொட்டி வாய்ப்புறம் பந்தனப்படுத்தி மணற்கொட்டிய பாத்திரத்தில் இந்த மூசையைப் பூர்த்தியாய்ப் பொதித்து மணல்மீது வரட்டியால் புடமிடுவது பூதப்புட மென்று சொல்லப்படும்.

## ஔஷதபேதங்கள்.

சொரசங்கள். ஈரவஸ்துக்களை இடித்து துணியில் மூட்டைகட்டிப் பிழிந்தரசம் சொரசமென்று சொல்லப்படும். மேலும் காய்ந்த வஸ்துக்கள் எட்டுப்பங்குதண்ணீர்கொட்டி ஒருபங்குகாய்ச்சி இறைக்கியதற்கு ஸ்வசரத்திற்குப்பதில் என்றுசொல்லப்படும்.

கஷாயம். வஸ்துக்களை நறுக்கிப் பதினாறுபங்கு தண்ணீர்விட்டு மண்பாத்திரத்தில்போட்டு சிறியஅனலாலெரிக்க எட்டுபங்கு காய்ச்சி இறைக்கி வடிகட்டிக்கொள்ளவும். இதற்கு கஷாயமென்று சொல்லப்படும்.

சூரணங்கள். வஸ்துக்களை யிடித்து வஸ்த்திரகாயஞ் செய்து இதற்குத்தக்கபடி சக்கரை அல்லது வெல்லஞ்சேர்த்து (சக்கரை இரண்டுபாகம் சூரணம் நாலுபாகம்) தண்ணீரிற் கலக்கிக் குடிக்கவும்.

லேக்கியம். சரக்குகளைக் கஷாயஞ்செய்து வெல்லம் அல்லது சர்க்கரையைப்பாகம்செய்து அதில் கஷாயம் கொட்டி மருந்துசூரணம்கொட்டிக் கிளறி நெய்யும் தேனும்விட்டுக் கிளறியெடுப்பது லேக்கியமென்றுசொல்லப்படும்.

தைலங்கள். எண்ணெயில் வஸ்துக்களைப்போட்டு அடுப்பின்மேல் இரும்புசட்டியில் காயும் சமயம்பார்த்து ஒருவர்த்தி நனைத்து எரிக்கச் சிடசிடப்புக்கட்டாமல் எரிந்தாலும் அல்லது வெள்ளைநுரைகட்டினாலும் இறைக்கிவிடவேண்டும்.

---

## வியாதியஸ்தருக்குச் சேர்க்கும்பதார்த்த இலக்ஷணம்.

வாதரோகக்குச் சேர்க்கும்பதார்த்தங்கள். கத்திரிப்பிஞ்சு பாவைப்பிஞ்சு முருங்கைப்பிஞ்சு அவரைபிஞ்சு ஆகும்.

கீரைதினுசுகள். குப்பைமேனி முளைக்கீரை பொன்னாங்கணி செவப்புப்பசலைக்கீரை ஆகும்.

வற்றல்தினுசுகள். அவரைக்காய் பெண்டை புடலங்காய் மணத்தக்காளிக்காய் சுண்டைக்காய்வற்றல் இவை ஆகும்.

ஊறுகாய்தினுசுகள். இஞ்சி கடுக்காய் தான்றிக்காய் நார்த்தங்காய் இவை உப்பில்ஊறியிருக்கவேணும்.

### பித்ததேகத்துக்குச் சேர்க்கும் பதார்த்தங்கள்.

அவரைப்பிஞ்சு கத்திரிப்பிஞ்சு பாவைப்பிஞ்சு பீர்க்கம்பிஞ்சு மாங்காய் வாழைக்காய் வாழைப்பூ இவை ஆகும்.

கீரைத்தினுசுகள். ஓரிலைத்தாமரை சுரைக்கீரை பாவயிலை மணத்தக்கீரை முருங்கைக்கீரை அகத்திக்கீரை இவைகளுடைய இளங்கீரையாகும்.

வற்றல்தினுசுகள். சுண்டைக்காய் மணத்தக்காய்.

ஊறுகாய்தினுசுகள். இஞ்சி எலுமிச்சை நாரத்தன் பச்சைமுளகாய்.

சிலேத்மரோகத்திற்குச்சேர்க்கும் பதார்த்தங்கள்.

அத்திப்பிஞ்சு அவரைப்பிஞ்சு பாவைப்பிஞ்சு கத்திரிப்பிஞ்சு சுரைக்காய் மாங்காய்பிஞ்சு முள்ளங்கி வாழைத்தண்டு இவை ஆகும்.

கீரைதினுசுகள். கோவை சக்கிரவர்த்திக்கீரை பொன்னாங்கணி கொத்துமல்லி மணத்தக்கீரை குப்பைமேனி பொத்திகீரை இவை ஆகும்.

வற்றல்தினுசுகள். அவரை சுண்டைக்காய் மணத்தக்காய் இவை ஆகும்.

ஊறுக்காய்தினுசுகள். அத்திப்பிஞ்சு ஆலம்பிஞ்சு சுண்டைக்காய் கடுக்காய்பிஞ்சு வாழைத்தண்டு இவைகள் உப்பில் ஊறினதாயிருக்கவேண்டும்.

மேகரோகத்துக்குச் சேர்க்கும் பதார்த்தங்கள்.

அத்திப்பிஞ்சு அவரைப்பிஞ்சு அரைக்கீரை கத்திரிப்பிஞ்சு கறுப்புவாழைப்பிஞ்சும்பூவுமாகும் கோதுமை கோவைக்காய் துவரை பொன்னாங்கணி மாம்பிஞ்சு முருங்கைப்பிஞ்சு வெள்ளைப்பசலைக்கீரை வெள்ளைவெங்காயம் இவைகள்சேர்க்கவும்.

பத்தியத்திற்சார்ந்த ஊறுகாய்கள். எலுமிச்சை சுண்டைக்காய் நாரத்தங்காய் இவைகள் ஆகும்.



| நெம்பர். | ஜீர்ணிக்கும் பதார்த்தங்கள். | ஜீர்ணிக்கும் நிமிஷகணக்கு |
|---|---|---|
| 1 | பச்சரிசி வெல்லம் தேன் சர்க்கரை | 20 |
| 2 | காரசாதம் மாவுபதார்த்தம் | 20 |
| 3 | வெண்ணெய் | 15 |
| 4 | மோர்சாதம் | 15 |
| 5 | தண்ணீர்ச்சாதம் | 18 |
| 6 | பால | 20 |
| 7 | வெண்ணெய்ச்சாதம் | 15 |
| 8 | ஜெயநீர் அரைத்தமருந்து பழரசம் பருப்பு நிணுசு பழம்பலா மாங்காய் வாழை புஷ்பங்கள் இடித்துபிழிந்தரசம்இவைக ளெல்லாம். | 77 |
| 9 | தயிர்ச்சாதம் | 11 |
| 10 | காய்க்கறிவர்க்கங்கள் | 8 |
| 11 | தேன் லேக்கியம் சூரணம் தைலம் | 12 |
| 12 | கஷாயம் | 3 |
| 13 | தயிர்சாதமுண்ணத்தண்ணீர்குடிக்க | 4 |
| 14 | காய்ந்துஆறியதண்ணீர் பஸ்பம் | 3½ |
| 15 | காடித்தண்ணீர் | 5 |

## வஸ்துக்களுடைய சத்துரு மித்துரு

### பேதா பேதங்கள்.

பொன். இதற்கு கௌரிபாஷாணம் நாகம் தாளகம் மனோசிலை வெள்ளைபாஷாணம் முதார்சிங்கு கெந்தகம் சவ்வீரம் காந்தம்இவை களெல்லாம்சத்துரு. மற்றையதினுசுகள் பொருந்தியதென்றுயோசிக்கவும்.

நாதத்திற்கு. மிளகு வெண்காயம் சவ்வீரம் முதார்சிங்கு அன்னபேதி அபினி வெள்ளி கிளிஞ்சல் அபரஞ்சி கடலுப்பு இவைகள் சத்துருவஸ்துக்கள்.

மித்துருவஸ்துக்கள். சிலாசித்து இரும்புகாந்தம் அபிரேக்கு கெந்தகம் கௌரிபாஷாணம் கறுப்புஈயம் செப்பு இவைகள்பொருந்தியவஸ்துக்கள்.

கறுப்புஈயத்திற்குசத்துரு. கோழிமுட்டை நத்தை கிளிஞ்சல் வண்டு கௌரிபாஷாணம் கெந்தகம் அபிரேக்கு கல்நார் இரும்பு காந்தம் சமுத்திரவுப்பு இவைகள் சத்துருவஸ்துக்கள்.

மித்துருவஸ்துக்கள். நாகம் செம்பு வெள்ளி சூதம் வெள்ளீயம்.

அயத்திற்குச்சத்துரு. அபிரேக்கு வெள்ளியம் கெந்தகம் மனோசிலை வெங்காரம் சவ்வீரம் மூர்தார்சிங்கு கௌரிபாஷாணம் சிலாசத்து வெள்ளைபாஷாணம் வெங்காயம் இவையெல்லாம் சத்துருவஸ்துக்கள்.

மித்துருவஸ்துக்கள். செம்பு காந்தம் நாகம் ரசம் கர்ப்பூரம் பொன் கெந்தகம் வெள்ளி.

துத்தத்திற்கு வெள்ளைப்பாஷாணம். காந்தம் அபிரேக்கு படிக்காரம் கடலுப்பு மூர்தார்சிங்கு வங்கம் நாகம்

மித்துருவஸ்துக்கள். வெங்காரம் அரிதாரம் செவ்வீரம் கெந்தகம் மனோசிலை ரசகர்ப்பூரம் சூதம் இங்குலிங்கம் கௌரிபாஷாணம்.

நவாச்சாரத்துக்கு. கறுப்புஈயம் கற்சுண்ணம் முத்தெண்ணெய் மஞ்சள் வெள்ளைவங்கம் கல்காந்தம் அயக்காந்தம் கடல்நுரை சைந்தலுப்பு படிக்காரம்.

மித்துருவஸ்துக்கள். கல்நார் செவ்வீரம் இங்குலிங்கம் வெங்காரம் கெந்தகம் மனோசிலை அரிதாரம் கௌரிபாஷாணம்.

கடலுப்புக்கு. செவ்வீரம் மிர்தார்சிங்கி மனோசிலை பழம்புளி பவழவேர் மண்ணுப்பு இவைகள் சத்துருவஸ்துக்கள்.

மித்துருவஸ்துக்கள் செப்பு இங்குலிங்கம் வங்கம் வெங்காரம் கௌரிபாஷாணம் ரசகற்பூரம் அபிரேக்கு வெள்ளைப்பாஷாணம் நாகம் அரிதாரம் இரும்பு.

படிக்காரத்துக்கு. சிலாசத்து மயில்துத்தம்.

மித்துருவஸ்துக்கள். உபரசபாஷாணதினுசுகள்.

## உரோகங்களுக்கு ஜீர்ணிக்கும்

### வஸ்துக்கள் விவரம்.

இங்குச்சொல்லப்பட்ட ரோகங்களுக்குஜீர்ணிக்கும்வஸ்துக்கள்சமுதாயமாய் அந்தந்த ரோகங்களுக்குக்கொடுக்கும், ஔஷதங்களுடன், சகாயமாய்ச் சேர்த்துக்கொடுக்கலாம். மிகவும் அந்தந்தரோகங்களுக்கு ஜீர்ணிக்கும் வஸ்துக்கள் கஷாயம் தைலம் ரசாயனம் லேக்கியம் நஸ்யம் ஸ்நானம் இவ்விதங்களில், சமயாசமயத்தில் சேர்த்துக்கொடுக்கச் சகலரோகமும் தீரும்.

## உரோகங்களின்பெயரும் அவைகளுக்கு ஜீர்ணிக்கும் வஸ்துக்களுடையபெயரும்.

வாதரோகத்திற்கு. தும்பராஷ்டம் தேவதாரி சிற்றாமுட்டி முத்துக்கொட்டை கரும்புவேர் ஏலம் இலந்தை அகற்கட்டை சுக்கு மஞ்சள் கரிவேப்பிலை பெருங்காயம் கள்ளி கொடிக்கள்ளி எண்ணெய் பருத்திக்கொட்டை பஞ்சலவணம்.

பித்தரோகம். பொன்னாங்காணி பூச்சக்கிரக்கிழங்கு சர்க்கரை திராகை்ஷ குறுவேர் வெட்டிவேர் பேரீச்சன் கொடிவேலி சந்தனம் பச்சைக்கர்ப்பூரம் அதிமதுரம் ஆல் அரசு அத்தி புங்கை நெல்லிக்காய் இளநீர் நிலவேம்பு பேய்ப்புடல் தகரை வாழைப்பழம் வாழைப்பூ வெள்ளரிப்பழம் முருங்கைப்பூ.

இரத்தவாதத்திற்கு. தும்பராஷ்டகம் மஞ்சள் தேவதாரி அதிமதுரம் சிற்றாமுட்டி வெட்டிவேர் சிலாசத்து தாழைவிழுது இரசம் பூச்சக்கிரக்கிழங்கு கொடிவேலி கோஷ்டம்.

சேரத்தத்திற்கு. மிளகுபொடி கடுகு சிற்றாமணக்கெண்ணெய் சயிந்தலுப்பு சந்தனம் நெய் வெட்டிவேர் சீந்திற்கொடி.

இரத்தபித்தத்திற்கு. ஆடாதொடை பற்பாடகம் வெட்டிவேர் சந்தனம் தேங்காயப்பூ திராகை்ஷ அதிமதுரம் திரிபலாதி பேரீச்சன் தண்ணீர்விட்டான்கிழங்கு பால் நெய் பொன்னாங்காணிதேன் ஆலங்கொழுந்து ஆலம்விழுது வெள்ளைச்சர்க்கரை.

கபரோகத்திற்கு. சைந்தலவணம் திரிகடுகு தேவதாரம் மரமஞ்சள் கடுக்காய் தாளிச்சபத்திரி குறுவேர் தேன் சித்திரமூலம்.

காசரோகத்திற்கு. ஜடாமாஞ்சிர் மஞ்சள் வசம்பு மோடி ஓமம் சித்திரமூலம் கருஞ்சீரகம் சீரகம் கடுகு தும்பராஷ்டம் தேவதாரி மனோசிலை சைந்தலவணம்.

க்ஷயரோகத்திற்கு. பெருங்காயம் தாளிச்சபத்திரி கடுகுரோகணி அவுரி ஜாதிக்காய் கரசலாங்கண்ணி சீந்திற்கொடி பூசசக்கிரக்கிழங்கு உளுந்து சங்கங்குப்பி பால் சர்க்கரை திராக்ஷை.

சுவாசகாசசுரத்திற்கு. நெய் ஆட்டின்பால் பேரீச்சன் வெண்ணெய் கலியாணபூசணை திராக்ஷை.

சகலஜ்வரத்திற்கு. பற்பாடகம் தனியா கொத்துமல்லி நிலவேம்பு சுக்கு சீந்திற்கொடி திராக்ஷை குறுவேர் சந்தனம் தண்ணீர்விட்டான்கிழங்கு மோடி திப்பிலி கண்டுப்பரங்கி ருத்திராக்ஷம் இளநீர் தேன்.

சீதஜ்வரத்திற்கு. மரமஞ்சள் திரிகடுகு சீரகம் ஈருள்ளி விஷ்ணுகிராந்தி துளசி நல்லதுளசி லவங்கப்பத்திரி கண்டுபரங்கி.

மார்நோவுக்கு. பெருங்காயம் தேவதாரி சுக்கு தும்பராஷ்டம் கடுக்காய் நெய் எண்ணெய் பஞ்சலவணம்.

மஹோதரத்திற்கு. ஈருள்ளிநேர்வாளக்கொட்டை கள்ளி பெருங்காயம் கடுக்காய் முத்துக்கொட்டை பசுங்கோமயம்.

குன்மத்திற்கு. கள்ளிப்பால் குப்பைமேனி பஞ்சலவணம் சித்திரமூலம் கருஞ்சீரகம் சீரகம் பெருங்காயம் தேங்காய்ப்பால் தேவதாரி மரமஞ்சள் முள்ளங்கி எண்ணெய்.

இரத்தகுன்மத்திற்கு. சாரனை வெள்ளைச்சாரணை பெருங்காயம் சித்திரமூலம் நவாச்சாரம் ஈருள்ளி.

சகலஇரத்தரோகத்திற்கு வாளம் பெருங்காயம் ஈருள்ளி கடல்கிளிஞ்சள் கள்ளி விஷ்ணுகிராந்தி சித்திரமூலம் திப்பிலிக்கட்டை சுக்கு கோமயம்.

சூலைரோகத்திற்கு. வெள்ளைச்சாரணை சித்திரமூலம் திப்பிலிக் கட்டை கடுக்காய் கெச்சைக்காய் வசம்பு சிற்றாமணக்கெண்ணெய் பெருங்காயம் சருள்ளி பஞ்சலவணம்.

அதிசாரத்திற்கு. சிவனார்வேம்பு திப்பிலி அதிவிடயம் சுக்கு ஜாதிக்காய் மாங்காய்க்கொட்டை லவங்கம் வாழைப்பூ தேங்காய்ப்பூ சீரகம் வேம்புகொழுந்து அத்திப்பிஞ்சு மாதளம்பிஞ்சு கெச்சைக்கா ய் ஆட்டின்தயிர் தேன்.

இரத்தமூலத்திற்கு. சைந்தலுப்பு வெங்காரம் கோரைக்கிழ ங்கு பசும்வெண்ணெய் பசலைக்கீரை.

மூத்திரபந்தத்திற்கு. உளுந்து வெங்காரம் தாமரை கர்ப்பூர சிலாசத்து முருங்கைவேர் தேங்காய்ப்பூ லவங்ககஷாயம்.

வீரியவிருத்திஉண்டாக்கும் தினுசுகள். பாதரசம் தங்கபஸ் பம் கெந்தகம் அப்பிரேக்குபஸ்பம் வெள்ளைச்சாரணை தேவதாரி அபி னி வேலம்பிசின் ஜாதிக்காய் பூச்சக்கிரக்கிழங்கு முருங்கைப்பூ முரு ங்கைப்பிஞ்சு பொன்னாங்காணி தாமரைப்பூ தேங்காய்ப்பால் இள நீர் சாக்கரை நெய் கோதுமைமாவு வாழைப்பழம் இவைகளெல்லாம் வீரியவிர்த்தியுண்டுபண்ணும் தினுசுகள்.

வமனரோகத்திற்கு. பச்சைக்கர்ப்பூரம் மாதளம் இலந்தை மாங்கொழுந்து சர்க்கரை தேன் இலந்தைக்கொட்டை இளநீர் பிலா ப்பழம் சுக்கு சீரகம் பால் கொத்தமல்லி.

தந்தரோகத்திற்கு. தும்பராஷ்டம் சிற்றாமுட்டி தேங்காய்ப் பால் சைந்தலுப்பு சுக்கு எண்ணெய் கர்ப்பூரத்தைலம் ஓமம்.

வாய்ப்புண்ணிற்கு. ஜாபத்திரி தேவதாரி வேம்புப்பூ வேம்பு ப்பிசின் மரமஞ்சள் சுக்கு கோரைக்கிழங்கு இலந்தை துளசி கோம யம் சாரப்பருப்பு ஜாதிக்காய் படிக்காரம் தேன் பால் பச்சைக்கர்ப்பூ ரம் வங்கபஸ்பம்.

மூர்ச்சைரோகத்திற்கு. குதிரை நரி யானை முங்கிசம் பூனை உடு ம்பு பசு இவைகளுடைய பித்து சுருள்ளி திரிகடுகு இவைகளாற் செய்

தசூர்ணம் நன்னாரிவேர் இதனால் ஸ்நானமும் வேப்பிலையால் தூபம் கொடுக்கவும்.

குஷ்டரோகத்திற்கு. வெள்ளைச்சாரடை சந்தனம் வெட்டிவேர் சித்திரமூலம் கோரைக்கிழங்கு எருக்கை பேய்ப்புடலை மனோசிலை தாளகம் கள்ளி மரமஞ்சள் மஞ்சள் பச்சைக்கர்ப்பூரம் சீந்திற்கொடி வாய்விளங்கம் முஷ்டிகொட்டை பசு ஆடு கரி குதிரை கழுதை இவைகள் மூத்திரம் துளசி வேம்பு.

நேத்திரரோகத்திற்கு. சங்கு மைல்துத்தம் பால்துத்தம் சைந்தலவணம் படிக்காரம் பச்சைக்கர்ப்பூரம் சந்தனம் மனோசிலை கடல்நுரை மரமஞ்சள் காவிக்கல் மஞ்சள் கெந்தகம் பாதரசம் ஈயம் அன்னபேதி ஜாதிக்காய் அவிரி அரசுக்கொழுந்து வெள்ளைச்சாரடை சிலாசத்து கடுகுரோகணி சிற்றாமுட்டி அஷ்வகந்தி முள்ளங்கி வெங்காரம் பனம்பட்டைரசம் முலைப்பால் பால் தேன் பசுநெய் வெண்ணெய்.

எலிகடிரோகத்திற்கு. எருக்கை வெள்ளையெருக்கு சையிந்தலுப்பு மஞ்சள் மரமஞ்சள் கோரைக்கிழங்கு சப்பாத்தி கருந்தும்பை கறிவேப்பிலை குண்டுமணி எலிகாதிலை சாரடை.

நாசிகரோகத்திற்கு. தாளிச்சபத்திரி சித்திரமூலம் மஞ்சள் துளசி நாயுருவி தேவதாரி குங்கிலியம் கருஞ்சீரகம் சீரகம் மோடிவாய்விளங்கம் புங்கங்கொட்டை.

---



வைத்தியன் ரோகியிடம் போகத்தகாதநாளும் திதியும்.

| | வாரங்கள். | திதிகள் |
|---|---|---|
| 1 | ஞாயிற்றுக்கிழமை | சதுர்த்தசி |
| 2 | திங்கட்கிழமை | சப்தமி |
| 3 | செவ்வாய்க்கிழமை | துவிதியை |
| 4 | புதன்கிழமை | நவமி |
| 5 | விழாயக்கிழமை | அஷ்டமி |
| 6 | சனிக்கிழமை | சஷ்டி |

இந்தவாரங்கள்கூடிய தினத்தில் வியாதியாயிருப்பவனிடத்தில் வைத்தியன் போகக்கூடாது. இதனால் கஷ்டம்நேரிடும்.

வைத்தியனை யழைக்கத்தகாத வாரநக்ஷத்திரங்கள்.

| | வாரங்கள். | திதிகள். |
|---|---|---|
| 1 | ஞாயிற்றுகிழமை | அனுஷம் |
| 2 | திங்கட்கிழமை | உத்திராடம் |
| 3 | செவ்வாய்க்கிழமை | சதயம் |
| 4 | புதன்கிழமை | அஸ்வணி அல்லது மிருகசீரிடம் |
| 5 | வெள்ளிக்கிழமை | ஆயிலியம் |
| 6 | சனிக்கிழக்கிழமை | அஸ்தம் |

இந்த நக்ஷத்திரம் வந்தநாளில் வைத்தியனை யழைக்கப்போகலாகாது அழைத்தால் பிணிதீராது. கஷ்டம்நேரிடும்.

## நக்ஷந்திரத்தில் ஜனித்தரோக விபரம்.

| நெ | நக்ஷத்திரம். | | | திரும்நாள் | | மீ | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | அஸ்வனி | வியாதி | 9 | திரும் | அல்லது | 2 | பீடிக்கும் |
| 2 | பரணி | கண்டால் | 11 | பீடிக்கும் | அல்லது | ,, | மரணமுண்டு |
| 3 | கிர்த்திகை | ,, | 9 | திரும் | ,, | 2 | பீடிக்கும் |
| 4 | ரோகணி | ,, | 7 | ,, | ,, | ,, | ,, |
| 5 | மிருகசீரிடம் | ,, | ,, | ,, | ,, | 1 | திரும் |
| 6 | திருவாதிரை | ,, | ,, | ,, | ,, | ,, | மரணமாவார் |
| 7 | புனர்ப்பூசம் | ,, | 7 | ,, | ,, | ,, | மரணமுண்டு |
| 8 | பூசம் | ,, | 7 | ,, | ,, | ,, | ,, |
| 9 | ஆயிலியம் | ,, | 9 | ,, | ,, | ,, | ,, |
| 10 | மகம் | ,, | 20 | ,, | ,, | ,, | 9-நாள் மரண |
| 11 | பூரம் | ,, | 7 | ,, | ,, | 2 | மரணம் |
| 12 | உத்திரம் | ,, | 7 | ,, | ,, | 2 | பீடிக்கும் |
| 13 | அஸ்தம் | ,, | 15 | ,, | ,, | ,, | ,, |
| 14 | சித்திரை | ,, | 11 | ,, | ,, | | |
| 15 | சுவாதி | ,, | ,, | ,, | ,, | 2 | திரும் அல்ல |
| 16 | விசாகம் | ,, | 15 | ,, | ,, | | து மரணம் |
| 17 | அனுஷம் | ,, | 15 | ,, | ,, | | |
| 18 | கேட்டை | ,, | 15 | ,, | ,, | | சிலநாள்பீடிக் |
| 19 | மூலம் | ,, | 9 | ,, | ,, | 2 | மரணமுண்டு |
| 20 | பூராடம் | ,, | 15 | ,, | ,, | | பீடிக்கும் |
| 21 | உத்திராடம் | ,, | 1 | ,, | ,, | | மரணமாகும் |
| 22 | திருவோணம் | ,, | 11 | ,, | ,, | | |
| 23 | அவிட்டம் | ,, | 15 | ,, | ,, | | |
| 24 | சதயம் | ,, | 11 | ,, | அல்லது | | மரணமாகும் |
| 25 | பூரட்டாதி | ,, | 20 | ,, | 4-நாளில் | | |
| 26 | உத்திரட்டா | ,, | 7 | ,, | திரும் | | |
| 27 | ரேவதி [தி | ,, | 11 | நிற்கும் | | | அரிதிற்றிரும் |

## மூலிகைகளால் திரும்வியாதிகளின் குணங்களின் விவரம்.

அத்தி. இதன் பிஞ்சால் ஆசனவெரிச்சல் மூலக்கிராணி திரும்.

இதன்பாலால் அதிகஉஷ்ணம் பித்தம் தீரும். ஜீர்ணமுண்டாகும்.

இதன்பழத்தால் இரத்தகாசம் மேகம் தீரும். ஜீர்ணமுண்டாம். கபமூற்சையுண்டாகும். சீதளமுண்டுபண்ணும்.

இதன்காயால் உஷ்ணம் சூலை புண்கள் மலபந்தனம் மேகவாதம் இவைபோகும்.

இதன்பட்டையால் இரத்தசீதபேதி நாற்றமெடுத்தரணம் மேகம் இவைதீரும்.

இதன்கள்ளால் விசேஷமான வெரி உஷ்ணம் மேகம்தீரும்.

அதிவிடயம். கிராணி வாந்தி உஷ்ணம் பேதி இவைதீரும்.

அஷ்டமூலம். சோகை வாதரோகம் பல்ரோகம் நிவிர்த்தியாகும்.

எலியாமணக்கு. பித்தம் வாதம் மந்தம் இவையுண்டாகும்.

அசோகபுஷ்பம். காந்தியுண்டாக்கும்.

அக்ராகாரம். ஜ்வரம் தாகம் தோஷம் வாதம் இவைகள் தீரும்.

அபயக்கடுக்காய். சர்வரோககம் தீரும்.

அபினி. இதனால் சிலரோகம் நிவிர்த்தியாகுமானாலும் இதைத்தின்பதினால் அபாயமுண்டாகும் ஔஷதங்களில் சுத்திசெய்து கொஞ்சம் சேர்க்கவேண்டியது.

அயம். அக்கினிமந்தம் தேகஸ்தூலம் கிராணி குன்மம் பித்தபாண்டு வாய்வு ஸ்வேதகுஷ்டம் தீரும். பசியும் பேதியும் உண்டுபண்ணும்.

ஷை செந்தூரம். க்ஷயம் பாண்டுதீரும். இதைத்தின்னுங்காலத்தில் அபினி எள்ளு கடுகு கத்தரி கெஞ்சா கள் புகையிலை புளி பூசுணைக்காய் ஸ்திரீபோகம் விடவேண்டியது.

அஸ்வகந்திக்கிழங்கு. ஆயாசம் க்ஷயம் கரப்பான் பாண்டு வாதம் உஷ்ணம் தீரும். போகமுண்டுபண்ணும்.

அமிர்தகடுக்காய். ஸ்லேஷ்மம் இதரரோகங்கள் நிவிர்த்திக்கும்

அபிரேக்கு. அண்டவாதம் நேத்திரரோகம் பஹுமூத்திரம் வாதம் பித்தம் மஹோதரம் மேகம் ஊஷ்ணம் தீரும்.

அப்ளாகாரம். கபம் வாதம் குன்மம் சூலை சுவாசகாசம் இவைகளை ஹரிக்கும்.

இஞ்சி. திரிதோஷம் இருமல் கபம் நுரையீரல்வியாதிமேகம் வீக்கம் சூலை ஜ்வரம் சர்வதோஷம் இவைதீரும்.

ஏலியாமணக்குக்கொட்டை. இருமல் எலிக்கடி கபம் வாதசீத பேதி இவைதீரும்.

அன்னபேதி. சூலை நீர்மகோதரம் மந்தம் மூலைபடுத்தரணம் இவைதீரும். சாதத்தில்போட்டால் நீராகும்.

ஆடாதொடை 13-ஜன்னியும் கபம் வாதம் வாதஜ்வரமும் பலவிதமான ஜ்வரமும்தீரும். இதனுடைய வேரால் கழுத்துவலி காசம் சுவாசபந்தனம் மந்தம் இவைதீரும்.

அல்லிப்புஷ்பம். தாஹம் பஹுமூத்திரம் மேகரணம்தீரும்.

கடுகு. கபம் காசம் குன்மம் பித்தமந்தம் சீதம் மயக்கம் வாதப்பிடிப்பு திரிதோஷம் வாய்ரணம் இவைதீரும். இதன்எண்ணெயால் இரத்தபித்தம் கபம் குஷ்டம் மூலம் வயிற்றுவலி வாயுவு சுக்கிலபந்தனம் இவைகள்தீரும்.

இலைக்கள்ளிப்பால். சகல்ரணம் கட்டி வாதம் சூலை குன்மம் ஜன்னி இவைகள்தீரும்.

ஆகாசத்தாமரை. புழுக்களிருக்கும்ரணம் குஷ்டம் சிலந்தி சிரங்கு சொரிசிரங்கு இவைகள் தீரும்.

காட்டுப்பலா. தோஷங்கள் உண்டாக்கும்.

-வாழை. இதன்பழத்தால் சோகரோகம் பித்தரோகம் இவை தீரும்.

இதன்காயால் வயிற்றெரிச்சல் காசம் பித்தம் பேதி வாந்தி வாய்வு வாயில்நீர்வருதல் தீரும்.

இதன்கிழங்கு அக்கினிதீபனம் உண்டாக்கும்.

இதன்தண்டு குடல் புரட்டு கள்குடித்தலால்வரும் போதை இவற்றைநீக்கும்.

இதன்கிழங்கிலூறும் தண்ணீரால் இரணம் இரத்தபேதி ஆயாசம் பாண்டு தீரும். குளிர்ச்சியும் பலமும் உண்டாகும்.

இதன்பிஞ்சு இரத்தமூலம் இரத்தபேதி பஹுமூத்திரம் மேகம் கரப்பான்ரணம் தீரும்.

இதன்புஷ்பத்தால் ஊஷ்ணம் காசம் கால் கையெரிச்சல் பித்தம் மூலம் இரத்தமேகம் பேதி இவைகள்தீரும். தாதுபுஷ்டி உண்டாகும்.

இதன்இலை அக்கினிமந்தம் இருமல் கரப்பான் மேகவாதம் இவற்றைத்தீர்க்கும்.

மொச்சைக்காய் பித்த சிலேஷ்மம் வாயு ரோகம் உண்டாக்கும்.

இதன்கொட்டையால். திரிதோஷமும் உண்டாகும்.

அதன்கொடி. சீதளம் சிரங்கு நீக்கும். அதன்பிஞ்சு வாதம் நீக்கும்.

அரிதாரம். இரணம் இருமல் க்ஷயம் கரப்பான் இவை தீரும்

காராமணி. பசிதீரும். கபம் பேதி மந்தம் மாரடைப்பு திரிதோஷம் இவையுண்டுபண்ணும்.

அபரஞ்சி. அக்கினிமந்தம் ஊஷ்ணம் க்ஷயம் பித்தம் மேகம் வாதம் தீரும். தாதுபுஷ்டியுண்டாக்கும்.

காட்டுமாமரம். தாபம்ஹரிக்கும்.

காட்டுமல்லிவேர். ஜ்வரம் தாகம் நாவரக்ஷி மந்தம் பேதி இவைதீரும்.

காட்டுத்துளசி. உப்பிசம் ஹரிக்கும்.

காட்டுச்சீரகம். குன்மம் வாதம் பித்தம் மேகம் தீரும்.

காட்டுக்கருணை. ஜ்வரதோஷம் முளைமூலம் மேகம் ஹரிக்கும். அக்கினிதீபனம் உண்டுபண்ணும்.

ஊமத்தை. திரிதோஷம் இரணம் கட்டி இவைகளைப்போக்கடிக்கும் இதன்விரையால் அதிசாரம் ஜ்வரம் இவைநீங்கும். பயித்தியமுண்டுபண்ணும்.

உளுந்து. இந்திரிய நஷ்டத்தை நிவிர்த்திசெய்யும் வாதசீதளம் உண்டுபண்ணும்.

இதன்வடையால். பித்தம்போகும். வாதம் உண்டுபண்ணும்.

இதன்மாவு. பலத்தையும் வாதத்தையும் உண்டுபண்ணும்.

உப்புத்தண்ணீர். குடல்வாதம் அஜீர்ணம் பித்தம் வாதரோயகள்தீரும்.

உப்பு. அஷ்டகுன்மம் அக்கினிவாதம் பலமானகட்டி இவைகளைத்தீர்க்கும்.

ஈச்சங்கற்கண்டு. புழுக்கள் அநேகரோகம் உண்டுபண்ணும் இதன்வெல்லம் திரிதோஷம் புத்தி மந்தம் உண்டுபண்ணும். இதன் கள்ளு சிலரோகங்களையுண்டுபண்ணும்.

இலுப்பைஎண்ணெய். துர்ப்பலம்தீரும். இரணங்கள் சிரங்கு முதலானவை சம்பவிக்கும். அண்டவாதம் தீரும். இதன்பூவால் தாகம் பித்தஜ்வரம் தீரும். பைத்தியரோகம் சம்பவிக்கும்.

பெருங்காயம். அஷ்டகுன்மம் கர்ப்பசூலை தந்திமூலரோகம் மஹோதரம் மார்வலி இவற்றைஹரிக்கும்.

இங்குலிங்கம். கட்டி இரணம் சிரங்கு சிலந்தி குஷ்டம்ஜ்வரம் சூலை பேதி வாதம் ஹரிக்கும்.

பசும்பால். * அஸ்தகஜவாதம் உஷ்ணம் பைத்தியம் கபம் தாகம் மூர்ச்சை தீரும். ஸ்லேஷ்மம் உண்டுபண்ணும். இதன் மயத்தால் உஷ்ணவியாதிகள் போகும். இதன் தயிரால் ஆயாசம்போகும். அக்கினிதீபனம் உண்டுபண்ணும். இதின்நெய்யால் சகலதிரிதோஷவியாதிகள் நீங்கும். இதின்மோர் தயிரைவிட மேன்மையாம். இதன் கோமயத்தால் சகலவிஷங்கள் பித்தபாண்டு உதிரரோகம்தீரும். விரோசனக்காரி.

வரகு அரிசி. இதன்சாதம் தின்பதினால் இந்திரிய நஷ்டமாகும். பித்தம் தலைவலி சிரங்கு இன்னும் சிலவியாதிகள் உண்டுபண்ணும்.

முத்தென்னெய். சகல வுதிரசூலைகளும் குஷ்டம் சிரங்கு முதலானவைகளும் தீரும். இதுவிரோசனத்திற்கும் ஆகும்.

சிகப்புப்பாதிரிபுஷ்பம். இரத்தபித்தம் கண்ணோய் இரணம் தீரும்.

சிகப்பு துளசி. விஷங்களும் கடியும் தீரும்.

சிகப்பு உளக்கீரை. ஸ்திரிகளுக்கு உண்டாகும் பிரமேகம் பித்தம் உஷ்ணம் இவைகளைஹரிக்கும்.

சிகப்புக்கரும்பு. கபம் தாகம் பித்தரோகம் இவைதீரும்.

சிகப்புக்கடுக்காய். தேஹகாந்தி புத்தியையுண்டுபண்ணும்.

சிகப்பு அல்லி. ஸ்லேஷ்மரோகத்தை ஹரிக்கும்.

வெய்யிலில் காய்ந்ததண்ணீர். சகலரோகத்தையும் போக்கடிக்கும், தேகத்திற்கு சகலவித சுகமுண்டாகும்.

எலிகாதுக்கீரை. ஜ்வரம் தாகம் பஹுமூத்திரம் பிரமேகம் நிவர்த்திக்கும் இந்திரியம் பலப்படும்.

எருமைப்பால். புத்திமந்தம் வாதம் திமிர் நித்திரை ஸ்லேஷ்மம் இவற்றையுண்டுபண்ணும். மருந்துசுபாவத்தைக்கெடுத்துவிடும்.

* அஸ்தகஜவாதம் யென்பது - பக்ஷவாதம்.



ஷை தயிர். பித்தயெரிச்சலை போக்கும்.

ஷை மோர். கபம் உண்டுபண்ணும்.

ஷை நெய். நேத்திரப்பிரகாசம் புத்தி தேககாந்தி இவற்றை நீக்கும். கரப்பான் பித்தம் வாதம் இவற்றையுண்டுபண்ணும்.

இளநீர். இராத்திரியில் குடித்தால் வயிற்றில் கிரிமிகளைப் போக்கும்.

அளிஞ்சல்மரம். காசம் குஷ்டம் வாயுவு விஷம் இவைகளை ஹரிக்கும் பித்தம்உண்டுபண்ணும். இதன்விரை விஷங்களைப் போக்கடிக்கும். மந்திரகாரர்க்கு உபயோகமாகும்.

+ காணகத்தின்தண்ணீர். தாகம் பித்தம் தீரும்.

ஊறுகாய். ருசிக்கும். திரிதோஷம்நிவர்த்திற்கும். ஜடராக்கினி உண்டாக்கும் கொள்வாதரோகத்தையும் ஹரிக்கும்.

மாவிலிங்கப்பட்டை. மேகம் ஜன்னி இவைகளைத் தீர்க்கும் இதையரைத்துப் பற்றிடக் கொப்புளிக்கும்.

நாயுருவி. இதன் இலை கபம் தந்திமேகம் பேதி மந்தம் வேர்வை இரத்தமூலம் இவற்றைப்போக்கும். இதன்விரை பசியைப் போக்கடிக்கும். இதின்பட்டை ஸ்திரீகளின் சூதகம் சுகுணம் செய்யும். வங்கத்தைச் செந்தூரிக்கும். இதின்வேர் வஸ்யத்திற்குப் பிரசித்தியாகும்.

நெல்லிக்காய். உஷ்ணம் இரணம் வாந்தி விக்கம் முதலானதும் ஹரிக்கும். இதன்வேர்காய்ச்சல் மலபந்தனை ஜன்னிஇவற்றைத் தீர்க்கும்.

எழுகு அயத்திற்குச் சொன்னதைப்போல் இதற்கும்உண்டு ஆகிலும் எழுகு அதிகதுரிதமாய் வியாதியைப் பீடிக்கும்.

கர்ப்பூரவள்ளி, இருமல் கண்வலி கபம் காய்ச்சல் வாதம் இவைகளைத் தீர்க்கும்.

---

+ காணகதின்தண்ணீர் - கடுமையாகியவெய்யலுள்ள நீர்வற்ற பூமியில் விளையும் உப்பு.

**கர்ப்பூரம்** ஜ்வரம் ஜலதோஷம் ஜன்னி காதுநோய் பித்தம் மந்தம் முகரோகம் வாந்தி இவைகளைத்தீரும். தீபனமுண்டாக்கும்.

**கருணைக்கிழங்கு.** மூலவியாதியைத் தீர்க்கும். நேத்திரகாந்தி சிரந்தி சூலை உண்டாகச்செய்யும்.

**கஸ்தூரிமஞ்சள்.** கரப்பான் இரணம் மந்தாக்கினி இவற்றை ஹரிக்கும். சுக்கிலத்தை விர்த்திசெய்யும்.

**கஸ்தூரி.** கபம் ஜன்னி தலைவலி இவற்றை ஹரிக்கும்.

**கடுக்காய்.** ரணம் அடிபட்டரணம் கண்வலி நாக்குவலி இவைகள் தீரும்

**கடுகுரோகணி.** கரப்பான் காய்ச்சல் திரிதோஷம். ரணம் மந்தம் வயிற்றுவலி வாயுவும்தீரும்.

**ஓமம்.** அதிசாரம் இருமல் சீதம் பேதிமாந்தம் மூலரோகம் இவற்றைத்தீர்க்கும்.

**ஓரிலைத்தாமரை.** சீதம் மேகம்தீரும். தாதுபுஷ்டி யுண்டாக்கும். இதன்இலை யரைத்துமோரில்கலந்து குடித்தால் பால் உண்டாக்கும்.

**ஆனைநெரிஞ்சி.** வெள்ளைக்குஷ்டம் வயிற்றுஎரிச்சல் சிலமேகம் தாகம் பித்தம் இவைதீரும்.

**ஏலரிசி.** எல்லாரோகத்தையும் ஹரிக்கும். தாதுவிர்த்திசெய்யும்.

**ஆற்றுத்தண்ணீர்.** தாகம் உஷ்ணம் கபம் இவைதீரும். தாதுவிர்த்தியுண்டாகும்.

**காவிக்கல்.** அக்கினி சிரங்கு மேகம் உஷ்ணம் இவைகளை ஹரிக்கும். தேககாந்தி உண்டாக்கும்.

**கார்போகஅரிசி.** கரப்பான்வாதம்கபம் இவைகளைத்தீர்க்கும். பித்தம் உண்டாகும்.

காந்தம். அயபாகதிற்சொல்லியதுபோல் இதுவு மப்படியே செய்யும்.

காடி. தேகத்தில் துர்நீரைத்தீர்க்கும்.

சிறுகோவை. பிஞ்சு விஷம் விக்கம்- ரணம் இவற்றைத் தீர்க்கும்.

வெங்கலபற்பம். சிலரோகங்களை ஹரிக்கும். குஷ்டம் ஜ்வரம் மூலம் இப்பற்பத்தைவெல்லாது. தாதுபுஷ்டியுண்டாக்கும். இதன் களிம்பு விஷத்திற்குச் சமமானது. நேத்திரவியாதியைஹரிக்கும்.

கர்ப்பூரவாழை. வயிற்றின் பிணியை ஹரிக்கும்.

துவரம்பருப்பு. பித்தம் ஜன்னிவாதம் ஸ்லேஷமம் விஷம் இவைகளை ஹரிக்கும். தாதுவிர்த்தியும் பலத்தையுமுண்டுபண்ணும்.

கத்தாழை. எரிச்சல் குஷ்டம் குன்மம் சூலை மூலம் மேகம் இவை ஆற்றும்.

கற்கண்டு. உஷ்ணம் கபம் இருமல் பல்வலி வாந்தி நமை இவைகளைநீக்கும். தாதுவிர்த்தியுண்டாக்கும்.

களாக்காய். இரத்தபித்தம் வாந்தி இவைதீரும். பசியெடுக்கும்.

இதன்பழம். சீதவாதம் உண்டாகும். காயாலுண்டான குண ம்பழத்தாலுமுண்டு. இதன்வேர் காயின்குணங்களைவிடத் துல்யம். விஷத்தை ஹரிக்கும். பிரசவித்தஸ்திரீகளின் மாயைமுதலானவை யும் தீர்க்கும்.

மலைத்தாமரை. இரும்பைதாம்பிரம்செய்யும். பலமானகுஷ்ட ம்விஷத்தையும் தீர்க்கும்.

மலைநெல்லிக்காய், இருமல் உஷ்ணம் பித்தம் இவற்றைத் தீர்க்கும். குளிர்ச்சியையுண்டுபண்ணும். இதன்வேரால்தீராதவாந்தி காய்ச்சல் பித்தசன்னி பித்தம் இவைபோகும்.

முசுமுசுக்கை. கட்டியைக் கரைக்கும். குழந்தைகளுக்குக் கபத்திற்கு ஆகும்.

நாய்வேளை அண்டவாதம் வயிற்றில் மலபந்தம்தீரும்.

நாய்துளசி. இருமல் கபம்தீர்க்கும் தேகத்திற்குச் சத்துவை யுண்டுபண்ணும்.

குராசானி ஓமம். கபம் இரணம் மேகம் வாதம் பேதி இந்திரியநஷ்டம் இவைகளை ஹரிக்கும். மயக்கமுண்டுபண்ணும்.

குப்பைமேனி. மூலம் குன்மம் கபம் சுவாசம் கிரந்தி சொரி இவற்றை ஹரிக்கும்.

குங்குமப்பூ. கண்புஷ்பம் கால்வலி கபம் தாகம் மேகம் இந்திரியநஷ்டம் நீர்தோஷம் காதுவலி பித்தம் மதுமேகம் இவைகளை மாற்றும்.

கிச்சிலிக்கிழங்கு. தலைவலி இரணம் விஷம் இவைகற்றை ஹரிக்கும். இதன் இலையால் கிரந்திபோகும்.

பாவையிலை. பாஷாணதோஷத்தைஹரிக்கும். இரசத்தைமுரிக்கும். பேதியையுண்டாக்கும். இதன்காயால் கிரிமிகள் ஸ்லேஷ்மம் ஒழியும். இதன்பழத்தால் கிரிமிகள் குஷ்டம் சுவாசம் திரிதோஷம் மேகம் இவைகள் தீரும்.

கருந்தக்காளி. பித்தம் வாய்ரணம் ஆற்றும்.

கழுதைதும்பை. இரத்தபேதி மூலம் இவைதீரும்.

ஆடுதீண்டாப்பாளை. வாதரோகம் காசம் குஷ்டம் இவை போம். இதுமருந்துக்கு இதன் இரசம் கொடுத்தால் முரிந்துவிடும்.

ஆனைத்திப்பிலி. கபம் தொண்டைக்கம்மல் இவைதீரும்.

பலகரைபஸ்பம். கண்வலி மந்தம் விஷஜ்வரம் இவைகளைத் தீர்க்கும்.

கொடியெலுமிச்சை. வாந்தி உஷ்ணபேதி இவைகளைத் தீர்க்கும்.

கெந்தகஉப்பு. உஷ்ணம் குடல்வாதம் மந்தம் இவைகளை ஹரிக்கும்.

கருடன்கிழங்கு குஷ்டம் சூலை கிரந்தி பாண்டு அரையாப்பு கரையாதகட்டி கொருக்கு வெள்ளை இவைநிவர்த்தி யாகும்.

கரசலாங்காணி. பித்தம் பயித்தியம் இவைகளைப் போக்கும்.

கஞ்சா. கரப்பான் பேதி இவைகளை ஹரிக்கும். பித்தம் பசியுண்டாகும் இது போதை வஸ்துவானதால் அதிகமாய்ச் சேர்க்கக்கூடாது.

பூவரசன்பட்டை. குஷ்டம் கிருமிகள் மகோதரம் மேகம் இவைகளை ஹரிக்கும்.

கசகசா. அதிசாரம் கிருமிகள் கிராணி இவைதீரும். நித்திரை விந்து காந்தி உண்டுபண்ணும்.

அறுகம்புல். இரத்தபித்தம் தலைவலி வாதம் இவைகளைத் தீர்க்கும். இதன்வேரால் திரிதோஷத்தையும் ஹரிக்கும்.

கெச்சக்காய்சமூலம். வாதரோகம் விஷம் அண்டவாதம் குன்மம் இவை போகும்.

அலரிப்புஷ்பம். இரணம் குஷ்டம் சொரிசிரங்கு பித்தம் இவைதீரும்.

கோழி இரைச்சி. அனேகரோகத்தை யுண்டுபண்ணும்.

கொக்குமாமிசம். கோழிஇரச்சியைபோல் ரோகத்தை யுண்டு பண்ணும்.

சர்க்கரை. தித்திப்பானது கபம் வாந்தி பித்தம் இவைகளைத்தீர்க்கும்.

மாடுதீண்டாம் பாலை. பேதி நாசியிலுண்டாகு மெரிச்சல் இவைகளை ஹரிக்கும்.

**சந்தனம்.** காச்சல் கடம் சிரங்கு பித்தம் இவைகளை ஹரிக்கும்.

**பிறண்டை.** உஷ்ணவாயுவு கிராணி சூலே பேதி இவைகளை ஹரிக்கும்.

**சதுரக்கள்ளி சமூலம்.** கபம் குன்மம் கடிவிஷம் சூலே மேகம் வாதம் இதைப்போக்கடிக்கும். பேதியுண்டாக்கும்.

**கௌரிபாஷாணம்.** சிலந்தி சூலே கனல்வேகம் வீக்கம் இவைகளை ஹரிக்கும்.

**கோரோசனே.** உள்மாந்தம் கபம் குழந்தைகள்ரோகம் மேகக்காச்சல் நீரிழிவு வைசூரிஇவற்றைத்தீர்க்கும்.

**கோதுமை.** பலம் தாதுபுஷ்டி யுண்டாகும்.

**வள்ளிக்கிழங்கு.** மேகம் தீரும். உதிரரோகம்உண்டுபண்ணும்.

**பூசனிக்காய்.** பித்தத்தைஹரிக்கும். மருந்து குணத்தைமுறிக்கும் வாதமுண்டுபண்ணும். இதன்விரைநல்லது.

**பண்ணைக்கீரை.** சிரங்கு சீதம் இதை ஹரிக்கும். இதன் வேர் வயிற்றின்வலியைத் தீர்க்கும்.

**குண்டுமணிஇலே.** இதை பிடிப்புகளுக்கு பற்றிடலாம் இதன் விரை சிலரோகத்திற்கு வுபயோகமானபோதிலும் மலபந்தக்காரி ஆகையால் இதையுபயோகிப்பது நலமல்ல.

**குங்கிலியம்.** இரணம் சூலே மேகம் இதைதீர்க்கும்.

**வளயலுப்பு.** குடல்வாதம் இன்னம்பலவாதம் குன்மம் சூலே ஊஷ்ணம் இவைகளைத்தீர்க்கும்.

**புளியங்காய்.** பித்தம்நிவர்த்திக்கும் வாதம்உண்டும்பண்ணும்.

**இதன்பழம்.** தாதுபுஷ்டி மந்தகுணம் பித்தம் தீர்க்கும். தேகம்மெலியும் அதிகரோகமுண்டுப்பண்ணும் ஜன்னி வாதஜ்வரம் உண்டுபண்ணும்.

**இதன்பூவால்** பித்தம் வாந்தியைதீர்க்கும் பாண்டுரோகத்தை யடக்கி உஷ்ணத்தை உண்டுபண்ணும்.

இதன்கொட்டை அதிசாரம் சுக்கிலமேகம் இவற்றைப்போக்கும்.

சித்தாமுட்டி. சகலமானகாச்சல் பித்தம் நேத்திரமந்தம் இவற்றைநிவர்த்திக்கும்.

சிறுதேக்கு. வாதஜ்வரம் தீரும்.

சேம்புக்கிழங்கு. மேகத்தை நிவர்த்திக்கும் பத்தியத்திற்கு பிரயோஜனப் படமாட்டாது.

சக்கிரவர்த்திக்கீரை. மூலவியாதி குஷ்டம் திரிதோஷமும் நிவர்த்தியாம்.

வால்மிளகு. தாகம் வயிற்றுவலி பித்தம் இருமல் இவைகளை நிவர்த்திக்கும்.

முலைப்பால். தாபதோஷம் பித்தஜ்வரம் நிவர்த்தியாகும்.

தண்ணீர்விட்டான்கிழங்கு. உஷ்ணஜ்வரம் பித்தம் சிலவியாதிகளும் தீரும்.

எருக்கன். ஜன்னி அநேகவிஷங்களையும் வாதத்தையும் போக்கடிக்கும்.

இதன்பால். கட்டி ஜன்னி வாயுவு போக்கடிக்கும் செந்தூரம் செய்யத்தகுந்த வஸ்து.

இதன் இலை. எலிகடி கிருமிகள் குஷ்டம் சூலை மலபந்தம் வாயுவு இவைகளைத் தீர்க்கும்.

ஜாதிக்காய். தலைபாரம் சீதஜ்வரம் சீதபேதி தீரும்.

ஜாபத்திரி. பேதி தாபஜ்வரம் தீரும். தாதுவிர்த்தியுண்டாம். பித்தமுண்டுபண்ணும்.

கள்ளி. கிருமிகள் குஷ்டம் சிரங்கு இவற்றை போக்கடிக்கும்.

ஜடாமாஞ்சில். இருமல் பித்தம் சுவாசம் உஷ்ணம்வயிற்றுவலி குஷ்டம் பழயஜ்வரம் இதைத்தீர்க்கும்.

செருப்படை. ஸ்லேஷ்மம் சூலை மந்தம் வாதம் வாதகுன்மம் இதைத்தீர்க்கும்.

சிறுலவங்கப்பட்டை. மூலவிரணம் இதை ஆற்றும் சீதளமுண்டுபண்ணும்.

சீந்திற்கொடி. ஜ்வரத்தையடக்கி தீபன முண்டுபண்ணும்.

இதன்கிழங்கால். சிலவிஷங்கள் அதிசாரம் ஜ்வரம் மாந்தம் இவற்றைப் போக்கடிக்கும் காயசுத்தி தீபனமுண்டுபண்ணும்.

தான்றிக்காய். மேகம் பித்தம் மேகவாதம் உஷ்ணம் தீர்க்கும்.

தாளிச்சபத்திரி. அஸ்திஜ்வரம் வாயுவு காசம் சுவாசம் ஸ்லேஷ்மம் மந்தம் இவற்றைப்போக்கடிக்கும் பசியையுண்டுபண்ணும்.

தாளகம். இரணம் சிரசின்வியாதி நேத்திரமந்தம் ஜ்வரம் க்ஷயம் இவற்றைத்தீர்க்கும்.

தாம்பிரபற்பம். எல்லாரோகத்தையும் தீர்க்கும்.

சேராங்கொட்டை மேகம் கரப்பான் கட்டி கிருமிகள் சிலந்தி மூலம் பவுத்திரம் குஷ்டம் சொரிசிரங்கு இதரமான வியாதிகள் தீரும். கர்ப்பமுண்டாகச்செய்யும்.

சீரகம். இருமல் குன்மம் தொண்டைக்கம்மல் பித்தம் வாந்தி ஜலதோஷம் போக்கடிக்கும் நேத்திரங்களுக்கு சலவை.

வெள்ளையூமத்தை. அதிசாரம் கிரந்தி மேகம் பேதி ரணம் விஷக்காச்சலைத்தீர்க்கும். இதை யுள்ளுக்குச்சாப்பிட்டால் அதிக பித்தம்செய்யும் இதன்சாற்றை யெண்ணெயில் கலக்கிக் காய்ச்சித்தடவலாம்.

கோரை. உஷ்ணம் காசம் பித்தம் வாதஜ்வரம் வாந்தி இன்னும் சிலரோகத்தை ஹரிக்கும்.

மைல்துத்தம் கண்ணோய் கரப்பான் காய்ச்சல் இவற்றைத் தீர்க்கும். வாந்தியுண்டுபண்ணும்.

துத்திராகம். பேதி பைத்தியம் மேகம் உஷ்ணம் போம்.

சயிந்திலவணம். அஷ்டகுன்மம் கபம் சுவாசகாசம் காசம் நாடிரணங்கள் தீரும்.

சூர்யகாந்தி. தேகத்தில் துர்நீரும் வாதமும் இவைமாறும்.

சவுசிக்காந்தம். ஜன்னி காய்ச்சல் பாண்டு மந்தம் மேகம் நிவர்த்தியாம்.

சாலாமிசிரி. இந்திரியவிளைவை யதிகப்படுத்தும்.

சாம்ப்ராணி. வாதம் வாந்தி தேகத்தின் துர்நீரையும் போக்கடிக்கும்.

கடலுப்பு. அஷ்டகுன்மம் சூலை பித்தம்போம் கொஞ்சம் பேதியையுண்டாக்கும்.

சவ்வீரம். குஷ்டமுதலான விரணமும் தீரும்.

சிலாசத்து. நரம்பிலுண்டான கட்டிகளை மாற்றும்.

சீத்தாப்பழம். பித்தம் கபம் மந்தம் உண்டுபண்ணும்.

வெள்ளி. இரத்தமேகம் திரிதோஷம் ரணம் இவற்றை மாற்றும் தாதுவிர்த்திசெய்யும்.

பேய்க்கரும்பு. சிலமருந்துக்கு ஆகும் பிசாசை யோட்டும்.

வெங்காரம். அஷ்டகுன்மம் இரத்தமூலம் மேகம் கிருமிகள் ஜன்னி நீரடைப்பு இவைதீரும்.

விஷ்ணுகிராந்தி. இருமல் கபம் விடாதகாய்ச்சல் தீரும்.

வாயுவிளங்கம். குஷ்டம் குன்மம் நாபி விஷம் பாண்டு இவை தீரும்.

நெற்பொரி. தாகம் பேதி வாந்தி இவையாற்றும்.

வசம்பு அக்கினிமந்தம் சூலை இரணம் பேதி வாயுவு இவைகளைத்தீர்க்கும்.

கத்தாரக்காய். கபம் தீரும். பித்தம் கிரந்தி சிரங்கு உண்டாகும்.

இதன்பழம். கபம் சுவாசம் வாதம் தீரும். கரப்பான் குஷ்டம் தாதுநஷ்டம் பித்தம் கிரந்தி உண்டாகும்.

இதன்பிஞ்சு. திரிதோஷத்தையும் ஹரிக்கும்.

ஐவிரலிக்கோவை. கரப்பான் வீக்கம் இநுநீரும் காமம் கர்ப்பம் பலம் இந்திரியவிர்த்தி யுண்டாகும்.

இலவங்கப்பூ. அதிசாரம் இரத்தபேதி கண்புஷ்பம் ஜன்னி ஜ்வரம் சுக்கிலநஷ்டம் பேதி பித்தம் வாந்தி இவைகளைத்தீர்க்கும்.

இலவங்கப்பத்திரி. சுவாசகாசம் தாகம் தாதுநஷ்டம் பித்தம் மேகக்காய்ச்சல் மேகக்கட்டி வாந்தி உஷ்ணம் இவைதீரும்.

இலவங்கப்பட்டை. இருமல் சுவாசகாசம் பாம்புவிஷம் தாது நஷ்டம் இவைகளைத் தீர்க்கும்.

அம்மையார்கூந்தல். இடுப்புவலி பேதி ஜ்வரதாபம் மாந்தம் மேகம் இவைதீரும். நடுக்கல் உண்டாகும்.

அரக்கு. சுவாசகாசம் குஷ்டம் குன்மம் ஜன்னிஇரணம் சிரங் கின்னோய்கள் தீரும்.

ரோஜாப்பூ. தேகத்திற்கு ஆரோக்கியமுண்டாகும்.

இலந்தை. இதன்வேர் பசியுண்டுபண்ணும் இதன் இலை பித் தத்தை ஹரிக்கும் இதன்பழம் பித்தம் வாந்தி வாதம் தீர்க்கும்.

தக்கோலம். தாகம் ஸ்லேஷ்மம் மேகம் ஜ்வரம் பாண்டுஇவை களை ஹரிக்கும். தாதுவிர்த்தி பலமுண்டுபண்ணும்.

ரேவற்சீனி. பித்தம் சுக்கிலமேகம் பேதி யுண்டாகும்.

ருமிமஸ்தகி தாதுபுஷ்டி பெருக்கச்செய்யும்.

ருத்திராக்ஷம். ஸ்லேஷ்மம் காய்ச்சலினுலுண்டானஇரத்தபே தி இவைதீரும்.

கேழ்வரகு. பித்தவாத முண்டுபண்ணும். இதன் கூழால் பித் தம் மகோதரம் வாதம் தீரும்.

கல்சுண்ணம. இரணங்கள் தலைவலி இவைதீரும்.

கற்காந்தம். கிராணி காய்ச்சல் பாண்டு மந்தம் மூலம் மேகம் இவை தீரும்.

அரசன்செடிச்சமூலம். இரணங்கள் சுக்கிலபாதை தாகம் உஷ் ணம் தாதுவிர்த்தி புத்தியுண்டாகும்.

இரசகர்ப்பூரம். சூலை குன்மம் அரையாப்புகட்டி இவைதீரும்.

ஆண்பிர்க்கு. மந்தம் வயிற்றுவலி கிரஹசேஷ்டை முதலான தும் போகும்.

தேன்மெழுக்கு. கொசுமெழுக்கு பற்பத்திற்காகும் ஈமெழு க்கு இரணங்களையாற்றும் கர்பஸ்திரீகள் மெழுக்கு தின்பதினல் கர் ப்பம்கரைந்துபோகும்.

வெந்தயம். அஸ்திஜ்வரம் தேகயெரிச்சல் சீதபேதி காசம் குழந்தைகளின் உஷ்ணம் பேதி இவை சாந்தமாம் தேகத்தில் சீதளமுண்டாகும். இதன்கீரையால் உஷ்ணபித்தம் தீரும்.

முருங்கைக்காய். வாதமுதலான நோய்களைத் தீர்க்கும் தாது விர்த்தியுண்டுபண்ணும் பத்தியத்திற் காகும் இதன்பட்டை கபம் ஜன்னி பேதி வாயுவு விஷம்தீரும்.

முள்ளாங்கி. சுவாசகாசம் கரப்பான் காசம் குடல்வாதம் குன்மம் சூலை தலைவலி வாதம் தீரும். இதன் இலை குன்மகட்டியை ஹரிக்கும். இதன்விரையால் தாதுபுஷ்டி யுண்டாகும்.

முழுத்துவரை. மூலரத்தம் மூலத்தின் முளையையும் எடுக்கும்.

முள்துளசி. சகலவிஷத்தையும் இரணத்தையும் ஆற்றும்.

முள்ளுக்கீரை. இதன்கீரை தின்பதினல் வாயுவு நோய்கள் உஷ்ணம் உண்டாகும் இதன் இலைச் சாம்பலால் உப்புண்டாகும். தங்கம் பற்பமாகும்.

முருதார்சிங்கி. கரப்பான் இரணங்கள் ஆறும்.

முளைக்கீரை. காய்ச்சல் காசம் மேகம் மந்தம் தாதுநஷ்டம். வாதமுண்டாகும்.

முத்துச்சுண்ணம். அதிசாரம் கிருமிகள் குன்மம் வாதம்தீரும்.

முந்திரிப்பழம். தாகம்தீரும். தொண்டைக்கம்மல் கரப்பான் இரணங்கள் உண்டாகும். இதன்பருப்பு பித்தவாதமுண்டுபண்ணும்

முளகாய்ப்பழம். குன்மம் இருமல் மந்தம் வாதம் தீரும்.

* முளகாய்க்கூட்டு. சகலமானரோகங்களை ஹரிக்கும்.

மரமஞ்சள். காய்ச்சல் மூலம் சுவாசம் தீரும்.

மாம்பிஞ்சு. பித்தம் மந்தம் வாதம் வாந்தி தீரும்.

இதன்காயால். பித்தம் பசியும் தீரும். இரணங்கள் வாதமுண்டாகும்.

---

* பாகம்செய்த குழம்பு,

இதன்பழம். தீபனமிக்கும். காய்குணம் பழத்துக்குமுண்டு இதன்கெட்டகுணத்தை பசுவின்பால் மாற்றும்.

இதன்வேர். சீதரத்தம் வாந்தி தீரும்.

மாசிபத்திரி. உஷ்ணம் தேகநோய் வாயுவு தீரும்.

மாசிக்காய். நாக்குரோகம் நேத்திரரோகம் மேகவியாதி உஷ்ணம் தீரும்.

மலாக்காசாம்பிராணி. இரத்தமேகம் மேகம் தாபம் மேகவாதம் இவைதீரும்.

மலாக்காகெந்தகம். கபம் கபாலஉஷ்ணம் பித்தம் மேகம் இவைகளைத்தீர்க்கும்.

மலைதாங்கி. மூலம் அக்கினிமந்தம் காதுவலிதீரும்.

முஞெசிலை. காய்ச்சல் சுவாசகாசம் இவைகளைத்தீர்க்கும்.

மோர். பசு அல்லது தழைமேயும் ஆட்டின்மோர் மருந்துகளுக்கு உபயோகமாம்.

நுணாயிலை. மந்தம் மேகத்தைத்தீர்க்கும். காந்தியையுண்டாக்கும் குழந்தைகளுக்கு ஆகும்.

இதன்காய். மேகநோயை ஹரிக்கும்.

இதன்பட்டை. கரப்பான் கிரந்தி ஸ்லேஷ்மஜ்வரம் இரணங்கள் இவைகளைத் தீர்க்கும்.

இதன்வேர். அக்கினிமந்தம். உஷ்ணம் போகும். கர்ப்பத்தில் மரித்த குழந்தையை வெளியாக்கும்.

பனிக்கட்டித்தண்ணீர். அதிக உஷ்ணம் ஆற்றும்,

ஆல்சமூலம். மேகம் உஷ்ணம் நிவர்த்திக்கும்.

இதன்பாலால். சுக்கிலம் விர்த்தியாகும். சகலரிணத்தையும் ஆற்றும்.

கொல்லைப்பல்லி, பல்வலி பித்தம் விஷம் வாதம் இவைகளைத் தீர்க்கும், தாளகபாஷாணவஸ்த்துக்களைச் சுத்திசெய்யத்தகுந்தது,

சிறுதேக்குச்சமூலம், இது சகலரோகத்தையும் நிவர்த்திக்கும்

அந்திமல்லிகை, இதன் இலையும் கிழங்கும் வாதம் இரணங்கள் வீக்கம் கட்டிகள் முதலானதையு மாற்றும்,

சிவகரந்தை, கரப்பான் வயிற்றின் கிருமிகள் சொரிசிரங்கு மேகம் உஷ்ணம் மலபந்தத்தைத் தீர்க்கும்,

முஷ்டிகீரை. இது சுக்கிலநஷ்டத்தை ஆற்றும். தேகத்திற்குச் சௌக்கியந்தரும்.

பொடுதலைச்சமூலம். அரைக்கட்டி உஷ்ணம் காசம் கிரந்தி சீதபேதி குழந்தைகள் மந்தரோகம் வாதம் குஷ்டம் தீரும். உஷ்ணத்தை யுண்டாக்கும்.

வெல்லம். மிதமாய்தின்றால் பிரமேகம்தீரும். உஷ்ணம் மேகமுண்டாக்கும்.

வெண்டக்காய். அதிசாரம் கபம் வாதம் சீதரத்தபேதி இவைகளை நிவர்த்திக்கும்.

கல்யாணபூசனி. அஸ்திஜவரம் பித்தஜ்வரம் உஷ்ணம் இடுமருந்து மேகம் இவைகளை ஆற்றும்.

முடக்கத்தான். அண்டவாதம் வாதம் பிடிப்பு சொரிசிரங்கு மலபந்தம் இவைதீரும்.

பீர்க்கங்காய். சீதளம் பித்தம் வாதம்கபமுண்டுபண்ணும்.

பாதுமை. இதன்காயால் கபம் பித்தவிகாரத்தை நசிக்கச் செய்யும்.

இதன்பழம். தாதுவிர்த்திகரமாகும்.

இதன்பருப்பு. கபம் உஷ்ணரோகம் சுக்கிலநஷ்டம் ஹரிக்கும்.

இதன்தைலம். தேகத்திற்கு ஆரோக்கியம் உண்டாகும்.

பொன்பற்பம். இது சுத்தமாயிருந்தால் சகலரோகத்தையும் தீர்க்கும் இல்லாவிடில் ரோகங்களையுண்டாக்கும்.

பிரம்மதண்டி கபம் வாதம் தீரும்.

பட்டாணி. அதிக வாதரோகமுண்டுபண்ணும்.

புல்லுருவி இரணங்கள் குஷ்டம் வாதம் கபம் விஷம் இவைகளைஹரிக்கும். வஸ்யத்திற்காகும்.

பாக்கு. காய்ச்சல் மூலம் கிருமிகள் இவை நிவர்த்தியாகும்.

புடலங்காய். பித்தம் போம் மேகப்படைகள் உண்டாக்கும்

பொன்னுங்காணி. வாதம் பித்தம் காசம் இவற்றை ஆற்றும் நேத்திரத்திற்குநலமாகும்.

போராமுட்டிவேர். மாந்தம் சீதக்காய்ச்சல் பித்தவாதக்காய்ச்சல்தாகம் தீரும்.

பெரியசீரகம். சகலரோகத்தையும் ஹரிக்கும் சலவைதீபனம் புத்தியுண்டாக்கும்.

திப்பிலி. சகலவியாதியையும் தீர்க்கும் தாதுபுஷ்டியை யுண்டாக்கும். இதன்கட்டையென்றால் மோடி இதன்விரை திப்பிலியைவிட அதிககுணமானது.

பலாப்பழம். வாதம் கிரந்திசிலேஷ்மம் இவைகளைத்தீர்க்கும்

பாதரிபுஷ்பம். பித்தக்காய்ச்சல் உஷ்ணம் இவைகளைத்தீர்க்கும். வஸ்யத்திற்காகும்.

பாதரசம். நேத்திரரோகம் கிரந்தி குஷ்டம் இரணங்கள் இன்னம் சிலரோகத்தையும் தீர்க்கும்.

படிக்காரம். குன்மம் தந்தரோகம் இவைதீரும்.

பனிநீர்ப்புஷ்பம். தாதுநஷ்டத்தைத்தீர்க்கும்.

பரங்கிச்சக்கை. மேகம் குஷ்டம் வாதம் மேகப்படை கட்டிகள் கீல் பிடிப்பு இவைதீரும்.

பவழம். அதிகதாஹம் திரிதோஷம் இந்திரியநஷ்டத்தையும் போக்கடிக்கும்.

பலா. இதன்பிஞ்சு மந்தம் காய் கொட்டை இவைகள் ரோகங்களை யுண்டுபண்ணும்.

பருப்புக்கீரை. பித்ததை ஹரிக்கும்.

பஞ்சலவணம். உதிரரோகத்தையாற்றும்.

பச்சைதிப்பிலிவேர். தாகம் பித்தம் சகலமேகத்தையும் நிவர்த்திர்க்கும். போகசக்தியையுண்டுப்பண்ணும்.

பச்சைக்கும்குமப்பூ. கபதோஷம் ஜலதோஷம் பீனிசம் இவைகளை போக்கும்.

பச்சைக்கர்ப்பூரம் மேகம் தாபம் குன்மம் கபம் பித்தம் இவைகள் தீரும். காந்தி வசியமுண்டாகும்.

நேர்வாளக்கொட்டை. சிலரோகங்கள் வாதம் தீரும். பேதியையுண்டாக்கும்.

நெய்ப்பீர்க்கு. வியாதியை யுண்டுபண்ணும். பத்தியத்திர்க் சாகாது.

நிலவேம்பு. பித்தமயக்கம் வாதம் தீரும்.

நிலப்பனை. கிரந்தி சூலை உஷ்ணம் மேகம் குஷ்டம் தீரும். இரத்தஹதையும் அதிகபோகத்தையும் வுண்டாக்கும்.

நிலஆவாரை குன்மம் ரணங்கள் படைகள் மலபந்தம்மூலவாயுவுதீரும். பேதியையுண்டாகச்செய்யும்.

முசுமுசுக்கை. பித்தம் மூலம் உஷ்ணம் ஹரிக்கும்.

நீர்மூள்ளி. அதிசாரம் வீக்கம் மேகம் தீரும். இதன் விரைக்கு முற்கூறியகுணமெல்லாமுண்டு இந்திரிய தாதுபுஷ்டி யுண்டாக்கும்.

அரைக்கீரை. இரத்தபேதி தீராதபயித்தியம் தீரும். இதுமகா ருசிகரமாயிருக்கும்.

எலுமிச்சை. குன்மம் சூலை திரிதோஷம்வாதகபம் இவைகளைப்போக்கடிக்கும்.

இதன்பழம். கண்வலி காய்ச்சல் தாகம் மயக்கம் விஷம் நிவர்த்திக்கும்.

இதன்விரையால். பித்தம் நிவர்த்தியாகும்.

நாகம். இருமல் கிரந்தி காசம் சிவாசகாசம் சூலை மூலரோகம் இவைகளைத் தீர்க்கும்.

சிறுநாகப்பூ. பித்தம் வாந்தி கபம் இரத்தவியாதி நமைச்சல் கெட்டவாசனை கண்டவியாதி இவைகளைபோக்கடிக்கும்.

பிரண்டை. அதிசாரம் இரத்தபேதி கபம் மூலவியாதி மந்தம் இரத்தவியாதிகள் வாய்வுந்தீரும்.

சிவனார்வேம்பு. சர்மகுஷ்டம் விஷம் பித்தவாதம் இன்ன மநேகவியாதியைத் தீர்க்கும். இதன்வேரால் கடிவிஷம் தீரும்.

கறுப்புகரசலாங்கண்ணி. கைகால்யெரிச்சல் குஷ்டம் தொண்டைக்கம்மல் தாபம் பாண்டு ரணங்கள் பித்தம் இன்னம் சிலவியாதியையும்தீர்க்கும்.

கறுப்புக்கடலை. காயசித்தியாகும்.

கறுவேலம்பட்டை. இரசத்தால் உண்டானபிடிப்பு நாபிறணம் பித்தம் தீரும். தந்தத்திற்குவலுவை யுண்டாக்கும்.

கறுப்புவேம்பு. என்றால் வேப்பஞ்செடிபோலவிருக்குங்கறுப்புபுஷ்பம் பூர்க்கும் ஓர் சாதிச்செடி இதனால்கிழவனும்பாலியனுவான் ஆனால் இது அகப்படுவது மகா துர்லபம்.

கறுப்புஊமத்தை. குஷ்டம் காய்ச்சல்தீரும். மயக்கம் தாது விர்த்தி உண்டாகும்.

கறுப்புஈயம். நேத்திரவியாதி கிரந்தி சீழ்கட்டி காய்ச்சல் சூலை நீர்க்கட்டு மேகம் வாதம் விஷம் இரணங்கள் ஆறும்.

கறுப்புத்துளசி. இருமல் ஜலதோஷம் ஜன்னி சுவாசம் சூலை மூர்ச்சை இவைதீரும்.

கருஞ்சீரகம் கரப்பான் காய்ச்சல் தலைவலி இதுகள்தீரும்.

கறுப்புச்சித்திரமூலம். அரைக்கட்டி இரத்தக்கட்டி கிரந்தி சூலை இவைதீரும்.

கறுப்புக்குக்கிலியம். குத்தல் மேகவாதம் சூலை இவைதீரும் பித்தமுண்டாகும்.

சவாச்சாரம். சிலேமேகம் குன்மம். மகோதரம் இவைகளைபோக்கடிக்கும்.

சரிவெங்காயம். கடம் உப்பிசம் தாபம் இவைகளைத்தீர்க்கும்.

சாத்தை.ம லவியாதி மூலவியாதிகளைபோக்கடிக்கும். தாதுவிர்த்தியுண்டாக்கும். நித்தியம் தின்பவர்களுக்கு. அசீர்ணரோகமுண்டு பண்ணும்.

வெள்ளரிக்காய். எரிச்சல் கரப்பான் மூத்திரவியாதி இவைகளை போக்கடிக்கும். பசியையுண்டுபண்ணும்.

இதன்பிஞ்சால். திரிதோஷம் தீரும்.

இதன்பழத்தால். சைத்திய முண்டாகும்.

இதன்விரையால். மூத்திரபந்தனம் மூத்திரவழியில் உண்டாகும் வியாதிகள் மேகம் தீரும்.

தொட்டிபாஷாணம். கிரந்தி காய்ச்சல் கண்வைத்த கட்டிகள் வாதம் இவைதீரும்.

தேவதாரி. உஷ்ணம் பீனிசம் பழயகாய்ச்சல் தீரும்.

கட்டுக்கொடி. இதன் இலை நீரைகட்டிவிடும் இதைத்தின்பதினால் இந்திரியத்தை கெட்டிப்படுத்தி உஷ்ணத்தை யடக்கும்.

உத்தாமணி. பல்வலி உப்பிசம் குளிர் குன்மம் மந்தம் வாதம் இன்னம் சிலவியாதியையுங்கண்டிக்கும்.

செம்பருத்தி. பித்தம் மேகம்இவற்றை ஆற்றும். இதன் புஷ்பத்தால்தாகம் பேதி வயிற்றின்சங்கடம்சுக்கிலநஷ்டம் உஷ்ணம் தீரும்.

மாதளம்பழம். உஷ்ணத்தையெடுக்கும்.

திராக்ஷை. உள்மாந்தம் க்ஷயம் காய்ச்சல் சுவாசம் தாகம் ஸ்தாபரவிஷம் பித்தம் மதமூர்ச்சை மூத்திரரோகம் மேகம் வயிற்றில் மந்தம் உஷ்ணம் இவைகளைப்போக்கடிக்கும். குளிர்ச்சியைத்தரும். நேத்திரபிரகாசம் தாதுபுஷ்டி யுண்டாகும்.

மருக்கொழுந்து கபம் உஷ்ணம் மந்தாக்கினி இவைதீரும்.

தர்ப்பைவேர். கபம் சகலகாய்ச்சல் தோஷம் இவற்றை ஹரிக்கும்.

தேன். திரிதோஷம் அரோசிகம் மந்தம் இவைகளை நிவர்த்திக்கும் இரத்தசுத்தியுண்டுபண்ணும்.

தேக்குமரம். இரணங்கள் சிரங்கு இவைகளைமாற்றும். தாது விர்த்தியுண்டாகும்.

தேங்காய்ப்பூ. பிரமேகம் மேகம் இவைகளைமாற்றும். இதன் கள்ளும் இதன் வெல்லமும் ரோகத்தையுண்டுபண்ணும். இதன்

என்ணெய்இரணங்களைநிவர்த்திக்கும். ரோகத்தைவளர்க்கும். இதன் பால் ஊஷ்ணரணம் வாய்ப்புண்ணை ஆற்றும். பித்த ரோகமுண்டு பண்ணும்.

வெள்ளைமிளகு. கபம் வாதம் கிராணி காய்ச்சல் மேகம் தீரும் தீபனம் உண்டாக்கும்.

வெள்ளைப்பாஷாணம். சகலவியாதியையும் தீர்க்கும்.

வெள்ளைத்தாமரைப்பூ. பித்தமேகம் பித்தவாயுவு கீல்வாய்வு மூலம் இவைகளை நிவர்த்திக்கும்பெண்களுக்குக்கர்பந்தரிக்கசெய்யும்.

வெள்ளைக்கரசலாங்கண்ணி. நாபிகமலத்தின் இரணம் இரணங்கள் மேகம் இவற்றை ஆற்றும்.

வெள்ளையீருள்ளி. எலிகடிவிஷம் வாதம் இவற்றை நிவர்த்திக்கும்.

வெள்ளியம் கபம் கரப்பான் கிரந்தி மேகம் பித்தம் மந்தாக்கினி இவைகளை ஹரிக்கும்.

வெள்ளாட்டின்பால். இதுநல்லதாயிருந்த போதிலும் அதைவிட தயிர்மோர் வெண்ணெய் நல்லவஸ்து.

வெள்ளைநாபி. குஷ்டம் ஜன்னி காய்ச்சல் குன்மதோஷம் நிவர்த்தியாகும் இதுமருந்துகளுக்கு நல்லவஸ்துவாயிருக்கின்றது.

வெள்ளைசிவதைவேர். பித்தத்தை ஹரிக்கும்.

வேள்ளைக்கடுகு. குஷ்டம் பக்கவலி பாலகிருஹதோஷம் இவைகளை நிவர்த்திசெய்யும்.

மேற்கூரிய சரக்குகளை எந்தெந்தசரக்கை எந்தெந்தபாகமாய்செய்து கொடுக்கவேண்டுமோ அதுபோற்செய்து கொடுக்க அவ்வவ்வியாதிகள் தீரும். இச்சரக்குகளை பாகப்படுத்தும்முறைகளும் அநுபானமும் சாப்பிடும்கிரமமும் மைற்றவைகளும் இரண்டாம் பாகத்தில்வரும்.

# வியாதிலக்ஷண

## விபரங்கள்.

கண்வியாதி லக்ஷணம்.

அதிக ஸ்ரீபோகத்தாலும் பத்தியக்கெடுதியாலும் இந்தரோகம் ஜனிக்கும் ஆனால் கருப்புமுழி நல்லதாயிருக்கும் வரையில் இந்த ரோகம் சாத்தியமாகும்.

காதுரோக லக்ஷணம்.

வாதம் மிகைத்துசெவியிற்குடியிருந்துஓசைகேளாமல்இருக்கச் செய்யும் காதில் சீழ்வரும் குத்தல்எடுக்கும் இதுலக்ஷணமென்றறிக.

குஷ்டரோக லக்ஷணம்.

வாதாதிதோஷத்தால் கெட்டரத்தம் பரவி சர்மத்திலூரி தழும்புகளாயும் வீக்கமாயும் ரணத்தொடுகூடியதாயும் வெள்ளையாயும் கறுப்பாயும் நமச்சலோடு கூடியதாயுமிருக்கும்.

பௌத்திரவியாதி லக்ஷணம்.

அதிக உஷ்ணத்தாலும் ஸ்திரீ ரோகத்தாலும் இது ஆசனத்துக்கு இரண்டங்குலம்மேல் கிரந்தியாகி தினேதினே விர்த்தியடைந்து கிருமிகள் உண்டாகும் ஒருக்காலத்தில் இரண்டு மூன்றுரண முண்டாகி அதன்கீழ் இரத்தமும் மலமும் தினம்வெளிப்படும். ஆகையால் இதைசிலர் ஆசனபவித்திரமென்று சொல்லுவார்கள்.

இரணவியாதி லக்ஷணம்.

வாதபித்தஸ்லேஷ்ம வியாதியால் ரணமுண்டாகும் இதில் சீழ் இரத்தம் விழுந்து குத்தல்கண்டிருந்தால் சாத்தியமாகும் கெட்ட வாசனைக்கண்டு பள்ளம்விழுந்து அதிகநாளாய் யிருக்கப்பட்டதை துஷ்டரணமென்று சொல்லப்படும். இதை சிலர் பெண் இரணமென்று சொல்வார்கள்.

வித்திரதிவியாதி லக்ஷணம்.

திருதோஷங்க ளதிகரித்து சூலையோடுகூடி கர்பத்தில் பிறந்து நாபியில் கட்டிபோலிருக்கும்.

### அண்டவிர்த்திவியாதி லக்ஷணம்.

அன்னபானாதிதோஷத்தால் வாய்வு பிரகோபித்து பீஜத்தில்சேர்ந்து ஒன்று அல்லது இரண்டும் பெருத்து நாடிகளுக்கு பாதையுண்டாக்கும் வாததோஷத்தாலுண்டான பீஜம் வீங்கி வடியாமலிருக்குமென்றறிக.

### சோகைவியாதி லக்ஷணம்.

சரீரம் வெளுத்து வெள்ளையாகி வீக்கங்காணும் சர்வாங்கமும இரத்தமற்று இருக்கும் இந்தரோகம் ஸ்திரீகளுக்கு முகத்திலும் புருஷர்களுக்கு பாதத்திலும் இருவர்களுக்கும் மர்மஸ்தானத்தில் உண்டானல் அசாத்தியம் அல்லது காய்ச்சல் தாபம் வமனத்தில் சேர்ந்திருந்தால் மிகவும் அசாத்தியமென்று சொல்லலாம்,

### உதிரவியாதி லக்ஷணம்.

வித்தியாசமானபதார்த்தங்களைதின்பதினுல்ஜடராக்கினிகுறைந்து அஜீர்ணத்தை யுண்டுபண்ணி வயிற்றுப்பிசம் மலபந்தம் அரோசிகம் உண்டாகும் வயிறுவீங்கியிருந்தால் ஜலோதரமென்று சொல்லப்படும்.

### கிரந்திவியாதி லக்ஷணம்.

மேகரோகம் அதிகரித்தால் தேகத்தில் அஸ்தியினூரி அக்கினிமந்தம் வுண்டாகும் இந்தவியாதி வுண்டானவர்களுக்கு அஜீர்ண முண்டானுல் அசாத்தியமென்றறிக.

### மேகவியாதி லக்ஷணம்.

மாம்சம் சுக்கிலம் இதுதோஷித்து இருபதுமேகரோகங்கள் உண்டாகும் இந்த வியாதி உண்டாகுமுன் வாய்நாற்றம் கைகால்எரிச்சல் சுவாசம் தாபமுண்டாகி நீர் சேற்றைப்போல் வெளியாகும்.வியாதிவந்தபிரகு மர்மஸ்தானம் குதஸ்தானம் இதில்வேதனை யுண்டாகி தேகத்தில் கிரந்தி கொருக்கு உண்டாகும் கொருக்குயென்றால் முதலில் ஆண்குறியில் சிருசிருதழும்புபோலவும் சிரங்கு போலவும் இரணங்களாயும் இரணததோடுகூடிய படைகளாயும் உண்டாகும். பித்ததோஷத்தால் அரித்திராமேகம் காலமேகம் சீதமேகம் மஞ்ஜிஷ்டாமேகம் நீலமேகம் இரததமேகம் என ஆருவிதமான மேகமுண்டாகும் இதுமகாகஷ்டமானவியாதிகள் ஸ்லேஷ்மதோஷத்தால் உண்

டாகுவது உதமேகம் இக்ஷுமேகம் சுராமேகம் சிகதரமேகம் சனை ர்மேகம் க்ஷாரமேகம் பிஷ்டமேகம் சாந்திரமேகம் சுக்கிரமேகம் லாலாமேகம்எனபத்துவகைஉண்டாகும். இவைகளில்சாத்தியமானவைகள் இன்னம் பூதிபிரமேகம் குதிரைபிரமேகம் தக்கிரபிரமேகம் கடிகாபிரமேகம் என அனேகபிரமேகங்கள் உண்டாயிருக்கின்றன. இந்த நாமங்களால் இந்த ரோகலக்ஷணத்தை சுலபமாய் தெரிந்துக்கொள்ளலாம். ஆண்குறியிலிருந்து கரும்புரசம்போல் நீர்வந்தால் இக்ஷுமேகமென்றும், தேன்போல் நீர்வந்தால் க்ஷேத்திரமேகமென்றும் வாய்நீர் போல் நீர்வந்தால் லாலாமேகமென்றும் மோர்போல் நீர் வந்தால் தக்கிர பிரமேகமென்றும் இதுபோல் யெல்லாமறிந்து கொள்ளவும்.

மூத்திரவியாதி இலக்ஷணம்.

திரிதோஷங்கள் அதிகரித்தால் நீர் இரங்குவது கஷ்டமாகும் இன்னம் ஆண்குறியில் எரிச்சலுண்டுபண்ணும். குத்தலுண்டாகும் அதிகனேயோடு சுக்கிலம் பச்சையாகவும் சிகப்பாகவும் இரத்தமாகவும் அதிக கஷ்டமாய் வெளியாகுமாகில் இதற்கு மூத்திரா கூத்தமென்று சொல்லப்படும். இதை நீச்சரோகமென்று ஆடிவருவார்கள். வயிறுவீங்கி குத்தலுண்டாகி இரத்தமாய் நீர்வெளிப்பட்டால் (மூத்திராஸ்மரி) யென்று சொல்லப்படும். மூத்திராஸ்மரியென்றால் நீரும் சுக்கிலமும்கலந்து கல்லைபோல் நின்று மூத்திரதுவாரத்தில் கஷ்டமிடும்.

குன்மவியாதி இலக்ஷணம்.

வாதபித்த ஸ்லேஷமம் ஜன்னிதோஷங்கள் அனுசரித்து இந்த ரோகம் ஜனிக்கும் ஸ்திரீகளுக்கு இரத்ததோஷத்தால் இதுஉண்டாகும். வியாதிவுண்டாகும் சமயத்தில் அதிகதாகம் மலபந்தம் ஏப்பம் வயற்றுப்பிசம் வயிற்றுநோய் அஜீர்ணம் இதுகள் உண்டாகி நாளுக்குநாள் தேகத்தை குன்றச்செய்து சிலநாள் பாதிக்கும்.

சூலைவியாதி இலக்ஷணம்.

பக்கம் முட்டிகீல்கள் நாபியின் கீழ்பாகம் முதுகு இதில் சூலை உண்டாகி மலம் மூத்திரபந்தம் தேகபாரம் அன்னதுவேஷம் தாகம் சுவாசகாசம் இந்தவேதனைகள் உண்டாயிருக்கும்.

மேல்சொல்லிய விபரமாய் வயிறப்பி பிராணஹிம்ஸையாயிருந்தால் சூலை பித்தசூலையென்றும் அன்னம் ஜீர்ணிக்கும் சமயத்தில் பிறக்கும்சூலை பரிணாமசூலையென்றும்தெரிந்துக்கொள்ளவும். இப்படியான இலக்ஷணமுண்டாகி காய்ச்சல் தாபம்வாந்தி இதுவுண்டானால் அசாத்தியமென்றறிக.

வாதரோக இலக்ஷணம்.

தேகத்தில் வாயுவு அதிகரித்து நரம்பிற்சேர்ந்து தேகத்தில்ஓரிடத்தில் அல்லது பலஇடங்களில் வாயுவுசேர்ந்து ரோகயை யுண்டாக்கும். இந்ரவியாதி அநேகவிதமானது இவற்றுள் கீல்வாதம் கை கால்பிடிப்பு முடக்கு தேகத்தில்குத்தல் நரம்புகள்முடக்குதல்ஸ்திரீகளுக்கு சூதகக்கட்டு முதலானதும் முகக்கோணல் இந்த லக்ஷனமெல்லாம் வாயுவென்று சொல்லப்படும். பக்ஷவாதத்தில் தேகத்தில் ஓர்புரமாக சொந்தமாயும் ஓர்புரம் கோணலாயும் சூதகவாயுவில் ஸ்திரீகள் தூரக்காலத்தில் பூர்வத்தில் அல்லது பிறகு வயிற்றுவலி உதிரபந்தன முண்டாயிருக்கும். சிலசமயங்களில் கர்பம்போல் காட்டும் ஆட்டியவாதத்தில் வாயுவு கபத்தோடுசேர்ந்து தொடைகள் ஊதி இரத்தம் குறைந்து ரோயதிகரித்து சௌக்கியமில்லாமலிருக்கும். இதை ஊர்ஸ்தம்பமென்று சொல்லப்படும். ஆமவாதத்தில் சர்வாங்கமெங்கும் வேதனையாகி சூலை தாகம் அன்னதிவேஷம் காய்ச்சல்முதலானது முண்டாகி தேள்கொட்டியதுபோல் குத்தல் இருக்கும் வயிற்றுநோயுடன் சேர்ந்துயிருந்தால் குன்மவாத மென்றறியவும்.

மதாதிவியாதி இலக்ஷணம்.

சாராயம் கள்ளு அபின் கஞ்சா முதலானவஸ்துக்களால் இந்தரோகமுண்டாகும் பலயீனர்கள் லாகிரிவஸ்துக்களை சாப்பிடக்கூடாது இன்னம் அன்னம் ஜீர்ணமாகுமுன்னும் வெய்யலில் திரியும் போதும் லாகிரிவஸ்துக்களை உபயோகப்படுத்தலாகாது.

மூர்ச்சைவியாதி இலக்ஷணம்.

வாதபித்த தோஷத்தாலும் லாகிரி வஸ்துக்களாலும் மூர்ச்சையுண்டாகி ஸ்மரணை இல்லாமல் கிடப்பார்கள். அச்சமயத்தில்கோட்டுவாய் மார்வலி சுவாசபந்தனமுண்டாகும்.

## தாபவியாதி இலக்ஷணம்.

உஷ்ணம் அதிகரித்து இரத்தம்கெட்டு தாபமுண்டு பண்ணும்.

## துருஷ்ணுவியாதி இலக்ஷணம்.

எவ்வளவு தண்ணீர்குடித்தாலும் தாகம்தீராமல் அதிகமாய்தாகிக்கும் இவ்வியாதியை துருஷ்ணுயென்று சொல்லப்படும். இதரவியாதி வரும்காலத்தில் அன்னேய்கண்டால் அசாத்தியம்.

## அரோசிகவியாதி இலக்ஷணம்.

வாதபித்தஸ்லேஷ்மம் வக்கரித்தால் அன்னதிவேஷமுண்டாகும். சாதாரணமாய் காய்ச்சல் வியாதிகள் சம்பவிக்கும்சமயத்திலும் இந்த ரோகம்உண்டாகும்.

## சர்வபேதவியாதி இலக்ஷணம்.

சீதளபதார்த்தம் விசேஷமாய் சாப்பிட்டாலும் அல்லது கெட்டியாகப்பேசுகிறதும் கூச்சல்போடுவதும் அதிகமாய்ப் படிப்பதும் பாட்டுபாடுவதும் இதுகளினல் இந்தவியாதியுண்டாகி பேசுவதர்க்கு துவனியில்லாமல் கண்டம் கபத்தில் சேர்ந்திருக்கும்.

## காசவியாதி இலக்ஷணம்.

க்ஷயத்தோடுகூடி தேகத்தை நாளுக்குநாள் குரைத்து கண்டத்தில் கோழைசேர்ந்து பிடிக்கும். இரத்தம்போல் கோழைவந்தால் அசாத்தியம்.

## க்ஷயவியாதி இலணக்ஷம்.

இருமல் மந்தம் கைகால் எரிச்சல் ஹீனஸ்வரம் தொண்டைக் கம்மல் காய்ச்சல் கோழைவிழுதல் மலபந்தம்அதிகசுவாசமுண்டாகியிருக்கும். இதில் அதிகசுவாசம் காய்ச்சல் அன்னதிவேஷம் மந்தம் உண்டானல் அசாத்தியமென்றறிக.

## இரத்தபித்தவியாதி இலக்ஷணம்.

தேகத்தில் உரோமத்துவாரமாயும் யோனி ஆண்குறி ஆசனம் வாய் இதுகளால் இரத்தம்வந்தால் இரத்தபித்தமென்று சொல்லப்படும். அகாலத்தில் வாந்தி அரோசகம் இதுஇருந்தும் ஆசனம்ஆண்குறி பெண்குறி இதுவழியால் இரத்தம்வந்தால் அசாத்தியம்.

பாண்டுவியாதி இலக்ஷணம்.

முகம் பாதம் நாபி மர்மஸ்தானம் இவற்றுள் சோபமுண்டாகி காந்தியில்லாமல் காய்ச்சல் அன்னதிவேஷமான பாண்டுரோகிகள் பிழைப்பது அசாத்தியம். நகங்கள் பற்கள் கண் இந்த யிடத்தில் இரத்தமில்லாமல் இருந்தால் மரணம் சமீபமென்று அறியவும்.

கிருமிகள்வியாதி இலக்ஷணம்.

காய்ச்சல் வாந்தி மூர்ச்சை அன்னதிவேஷம் சூலை முகக்காந்தி பேதம் மார்புவலி அதிசாரம் இதுவுண்டாயிருந்தால் ஜென்துரோகமென்று அறிந்து மருந்திட்டு சிகிச்சைசெய்யவும்.

அஜீர்ணவியாதி இலக்ஷணம்.

அகாலபோஜனம் செய்தல் பானம் நித்திரை இவைசெய்வதினாலும் அதிகமாய்ப் புசிப்பதினாலும் விசேஷ மாவுபதார்த்தம் கிழங்குதினுசுகள் அதிகமாமிசமாகிலும் புசிக்கின்றவர்களுக்கு இவ்வியாதி யுண்டாகி வயிற்றுவலியுடன் புளித்தயேப்பம் உண்டாயிருக்கும். சாதம்கொஞ்சமானபோதிலும் செரிக்காமல் மலத்திலாவது வாந்தியிலாவது தினம்வந்தாலும் வயிறு உப்பியிருந்தாலும் அசாத்தியம்.

கிரஹணிவியாதி இலக்ஷணம்.

அதிசாரவியாதி தீர்ந்தபிறகு சீதளபதார்த்தம் முதலான அவபத்தியம் செய்தவர்களுக்கு அக்கினிமந்தமாகி கிரஹணிரோகம் உண்டாகும் மலம் இரத்தம்சேர்ந்து ஆசன எரிச்சலுடன் வெளிவரும் சமயத்தில் நாற்றமாய்வரும். இதை அதிசாரரோகம்போல் சிகிசசை செய்யவேண்டியது.

அதிசாரவியாதி இலக்ஷணம்.

தேகத்தில் உஷ்ணமதிகரித்து இந்தவியாதி உண்டாகும் வாதாதிசாரத்தில் மலம் சிகப்பாயும் பந்தனமாயும் அபானவாயுவுகளோடும்மலம்வெளிப்படும். பித்தாதிசாரத்தில்மலம்கறுப்பாயும் மஞ்சளாயும் சிகப்பாயும் ஆசன எரிச்சலுடன் கூடியிருக்கும் ஸ்லேஷ்மாதிசாரத்தில் வெண்மையாயும் கறுப்பாயும் இரத்தம்கலந்து மலம் வெளிவரும். இன்னம் நானாவிதவர்ணத்துடன் மலம்வெளிப்பட்டால் இந்தரோகிபிழைப்பது மகா துர்லபம்.

### பழயகாய்ச்சல்வியாதி இலக்ஷணம்.

5-6-மாதம்வரைக்கும்இதற்குமேலும் சென்றகாய்ச்சலுக்கு பழயகாச்சல்என்றுசொல்லப்படும். அந்தசமயத்தில்சரீரத்துக்கு பலஹீனமாகும் சரீரமிளைக்கும் பக்ஷத்தில் பிழைப்பது அசாத்தியம். இந்தகாலத்தில் ஜன்னிசேர்ந்தால் மரணமுண்டாகும்.

## வைத்தியன் வியாதியஸ்தனிடம் போகும்போது நற்சகுனமறியும் விதம்.

1 கோரோஜனை
2 மாம்சம்
3 கொடை
4 பழங்கள்
5 வளையல்
6 மஞ்சள்
7 ஒண்டிக்ஷத்திரியன்
8 இரதம்
9 வீணை
10 பசு
11 நரி
12 அக்ஷதை
13 தாசி
14 பால்
15 எருது
16 மாங்கிலியஸ்திரீ
17 கள்ளு
18 கருடபக்ஷி
19 புஷ்பம்
20 தங்கம்
21 வெள்ளி
22 செம்பு
23 கண்ணாடி
24 வெற்றிலைபாக்கு
25 கரும்பு



நாகம் இடது பக்கமிருந்து வலது பக்கம் வந்தால்நலம்.

இடது பக்க மிருந்தாவது அல்லது தலைக்குமேல் பல்லி சொல்லுதலும்

யாராவதுதும்மி எழுந்துபோதலும்.

இந்தக்குணம் கண்டவுடன் வைத்தியன் போகும் காலையில் பலிதமாகும்.

## வைத்தியன் கெட்டசகுனம் காணும்விதமறிக.

1 வராகம்
2 எலி
3 பூனை
4 சன்யாசி
5 வரட்டி
6 நெருப்பு
7 எள்ளு
8 ரோகி
9 அமங்கிலயஸ்திரீ
10 கர்பிணி
11 கீரி
12 மலைப்பல்லி
13 மொட்டைத்தலையன்
14 சண்டாளன்
15 சாம்பல்
16 புதுப்பாண்டம்
17 கருப்புதான்யம்
18 கட்டை
19 எண்ணைக்குடம்
20 நாலுகாலுஜந்துவானாலும்
21 மருந்துப்பைவிழுந்தாலும்
22 நாய்எலும்பையெடுத்துப்போகக்கண்டாலும்
23 காலிலடிபட்டாலும்
24 இதரமானவர்வாவென்றழைத்தாலு
25 இடதுபக்கம்பாம்பைக்கண்டாலும்
26 காலில் முள்தைத்தாலும்

இந்தசகுனங்கண்டு வைத்தியன் தன்வீட்டைவிட்டுவெளிவரக்கூடாது. மிஞ்சிபோகும்காரியம் பலியாது என்று பெரியோர்செப்பியிருக்கின்றார்கள்.

---

## வஸ்துக்களுடைய பேதமறிக.

| இந்த வஸ்துக்கள் அகப்படாத நாளில். | இந்த வஸ்துக்களைச்சேர்க்கலாம். | இந்த வஸ்துக்கள் அகப்படாத நாளில். | இந்த வஸ்துக்களைசேர்க்கலாம். |
|---|---|---|---|
| அபிரேக்கு | கற்பாசி | ஏலக்காக்காய் | ஏலரசி |
| அரிதாரம் | தாளகம் | ஏலரசி | வால்மிளகு |
| அகர்சக்கை | பாஷா அகர்கட் | ஓமம் | அஜ்மூத் ஓமம் |
| அக்கிறுகாரம் | சின்னதிப்பிலி | | |
| அசாறுன் | சுக்குவசம்பு | கர்ப்பூரம் | மூங்கிலுப்புசந்த |
| அதிமதுரம் | சுக்கு | | [னம் |
| அபின் | குராசானிவோம | விளிகர் | பழச்சார் |
| இஞ்சி | சின்னதிப்பிலி ம் | காசிகட்டி | கத்தைகாம்பு |
| அயம் | மண்டூரம் | குங்குமப்பூ | சிக்கஞ்ஜபீன் |
| ஆலுபுஹாரா | புளியம்பழம் | குத்திரிக்கம் | றூமிமஸ்தகி |
| கடுகு | அப்போஷாக்கு | கொத்தமல்லி | கசகசா |
| இங்குலிகம் | முர்தார்சிங்கு | கோஷ்டம் | அக்கிராகாரம் |
| பெருங்காயம் | ஜாங்கீர் | கஞ்சா | ஊமத்தைவிரை |
| ஊமத்தைவிரை | பேகேலுபா | | |
| வால்மிளகு | ஏலரசிலவங்கம் | கத்தாழைரசம் | சிவதைவேர் |
| சித்திரமூலம் | கிச்கிலிகிழங்கு | கறுப்புசீரகம் | அனிசூன் |
| சிறுலவங்கப்பட் | வால்மிளகு | | [மை |
| ஜாதிக்காய் [டை | ஜாபத்திரி | நீலி | நாட்டு கோது |
| எருக்கன் | இலைக்கள்ளி | நிலப்பனைக்கிழங் | காறட்டுகிழங்கு |
| சீரகம் | கருஞ்சீரகம் | வாளம் [கு | சிவதைவேர் |
| தாமரைப்பூ | துத்திவிரை | நிலாவரை | சிவதைவேர் |
| தான்றிக்காய் | நெல்லிபருப்பு | மஞ்சள்கிழங்கு | பீதரோஹணி |
| சீந்தில் | அத்திப்பால் } | பாதரசம் | கறுப்புஈயம் |
| | இதன்கள்ளு } | திப்பிலிமூலம் | சுக்கு திப்பிலி |
| காஞ்சோரிவிரை | துத்திவிரை | திப்பிலி | சுக்கு மிளகு |
| துத்திநாகம் | கறுப்புஈயம் | | |
| கோரைக் கிழங் | ஜடாமாஞ்சில் | பீதரோகணி | மஞ்சள் |
| துத்தம் [கு | வைத்துஷண்ஸ் | | |



| | | | |
|---|---|---|---|
| வெள்ளைப்பூண்டு | காட்டுவுள்ளி | பூசக்கிரகிழங்கு | அக்கிறுகாரம் |
| சிவதைவேர் | காக்கரட்டைவே | மரமஞ்சள் | குங்குமப்பூ |
| கருப்புசயம் | வெள்ளைசயம் [ர் | மாசிக்காய் | மாதுளைஓடு |
| மிளகு | சுக்கு திப்பிலி | இலவங்கம் | ஜாபத்திரி |
| முத்து | முத்துவோடு | இளம்சுக்கு | இளம்இஞ்சி |
| துத்தியிலை | சீமைதுத்தி | வசம்பு | சீரகம் |
| முஷ்டிவிரை | பேகேலுபா | வாய்விளங்கம் | வால்மிளகு |
| வெந்தயம் | அத்திவிரை | மூங்கிலுப்பு | சந்தனம் |
| மேதுகவிரை | குராசானி ஓமம் | சன்னராஷ்டகம் | வால்மிளகு லவ |
| ருமிமஸ்தகி | குந்திரிக்கம் | | [ங்கம் |
| ரேவர்ச்சினி | ரோஜாபுஷ்பம் | | |
| அரக்கு | ரேவர்ச்சினி | சாம்பிராணி | ருமிமஸ்தகி |
| லவங்கப்பட்டை | வால்மிள்கு | சூராக்காரம் | சைந்தலவணம் |
| லவங்கப்பத்திரி | ஜடாமாஞ்சில் | சோம்பு | கற்பாசி |

முற்கூரியுள்ள ஒவ்வொருவஸ்துவும் அகப்படாமல் போனால் இதில்கூரியபடி வோருவஸ்துவை சேர்த்துக்கொள்ளலாமென முன்னோற்கள் கூரியிருக்கின்றார்கள்.

# நாடிஞான விசித்திர

## மாலிகை.

சர்வ வல்லதயாபர கடவுள் மனிதற்களுக்கு நியமித்த இந்த மானிடதேகத்தில் ஸ்துலமாயும் சூக்ஷமமாயும் மூன்றுகோடி அன்பதுலக்ஷம் நாடிகளிருக்கின்றன இதில் ஸ்துலநாடிகள் ஆயிரத்தியெழுபத்திஇரண்டு இன்னாடிகளை சுருகிபாகித்து யெழுநூருநாடிகள் மததலத்தை சர்மப்மெப்படி கவ்விபிருக்கின்றதோ அதுபோல் இம்மானிடதேகத்தை பந்தித்து யிருக்கின்றன இந்த யெழுநூருநாடிகளில் இடைகலை பிங்கலை சுழிமுனை சிகுவை புருடன் சரஸ்வதி விஷ்வோதரி குகு சங்கினி பயஸ்வனி அலம்புடை காந்தாரி அத்தி வாருணி இந்த பதினாலுநாடிகளும் மிகவும் ஸ்ரேஷ்டமானவைகள் யென்றறிக.

இதில் இடைகலை பின்கலை சுழிமுனை சிகுவை புருடன் காந்தாரி அத்தி அலம்புடை சங்கினி குகு இந்தபத்துநாடிகளும் முற்கூரி

யபதினாலுநாடிகளைகாண அதிக பிரயோஜனமுள்ளவைகளா இருக்கின்றன. வலதுகால் பெருவிரலில் நின்றும் கத்திரிக்கோல்போல்மாறலாக இடதுநாசியை பற்றிநிர்ப்பது இடைகலை இடதுகால் பெரும்விரலில் நின்றும் கத்தரிக்கோல்போல் மாறலாக வலதுநாசியை பற்றிநிற்பது பிங்கலை மூலாதாரமாய் துடர்ந்து எல்லாநாடிகளுக்கும் ஆதாரமாய் சிரசளவும் மூட்டிநிற்பது சுழிமுனை யென்றும்சொல்லப்படும். உண்ணுக்கில் நின்றும் சாதம்தண்ணீர் இவைகளை விழுங்க செய்வது சிகுவை யென்றுசொல்லப்படும். வலது கண்ணளவாய் நிர்ப்பது புருடனெனப்படும். இடது கண்ணளவாய் நிர்ப்பது காந்தாரி யென்றும்சொல்லப்படும். வலதுகாது மார்க்கமாய்நிர்ப்பது அத்தி என்றும் இடதுகாது மார்க்கமாய்நிர்ப்பது அலம்புடை என்றும் குரியினளவாய் நிர்ப்பது சங்கினிஎன்றும் அபானத்தளவாய் நிர்ப்பது குகு வென்றும் சொல்லப்படும்

நாடிகளுக்கெல்லாம் நாபி ஆதாரஸ்தானமாய் இருக்கின்றது இதிலிருந்து சர்வாங்கமும் நாடிகள் பிரவேசித்து அததினுடைய தொழிலை செய்யுகின்றன இது புருஷர்களுக்கு தக்ஷணபாகத்திலும் ஸ்திரீகளுக்கு வாமபாதத்திலும் விசேஷமாய் விஸத்தரித்து சஞ்சரிக்கின்றன புருஷர்களுக்கு வலது அஸ்த்தத்திலும் ஸ்திரீகளுக்கு இடது அஸ்தத்திலும் நாடிபார்க்க பிரசித்தமாய் யிருக்கின்றன. நபும்சகருக்கு இரண்டுகைகளும் பார்க்கலாம்.

வைத்தியன் ரோகியினுடைய வலது அஸ்தத்தை முழங்கை வரையில் தன் அஸ்த்தால் மெதுவாய்பிசைந்து விரல்களை நெட்டியுடைத்து ரோகியின் கரத்தைப்பிடித்து நாடி பரிக்ஷித்து பிரகு ரோகத்தின் நிதானமரிகவேண்டும்.

---

## நாடிபார்க்க தகாதவன்.

அபஸ்மானரோகமுள்ளவன் நாகம் தவளை கோழி இதன் மாமிசம் தின்பவன் யோகத்தை யனுசரித்தவன் கஞ்சா உபயோகிப்பவன் பயித்தியம் பிடித்தவன் மத்தியில் மதுபானமருந்த கற்றவன் ஸ்திரீபோகம் செய்தவன் துக்கத்தை யனுசரித்தவன் பிசாசுபிடித்தவன் வழிநடந்து அலுத்தவன் நித்திரைசெய்தவன் போஜனமருந்தினவன் ஸ்நானம்செய்தவன் இத்தொழிலுடையவர் களுக்கு நாடியைபார்க்கக்கூடாது யென்றறிக.

அஷ்டஸ்தான பரீக்ஷை.

முதன்மையில் வியாதியஸ்தனுடைய அஷ்டஸ்தானங்களையும் சோதித்துபிறகு சோடஸஸ்தானம் பரீக்ஷிக்கவேண்டும்.

அஷ்டஸ்தானமென்றால்என்ன சரீரநிறம் தேகத்தைதொட்டுப் பார்க்குதல் வியாதியஸ்தன்பேச்சைக் கேழ்குதல் நாவைபார்க்குதல் கண்களைப்பார்க்குதல் மலத்தைபார்க்குதல் நீரைபார்க்குதல் பிறகு நாடியைபார்த்தல் இந்த எட்டுவிதஸ்தானத்தை முந்தி யறியவேண்டும்.

ஸ்பரிஸ இலக்ஷணம்.

வியாதியஸ்தன்சரீரம் கொஞ்சம் புஷ்டியாயிருந்தால் வாதமென்றும் அதிக உஷ்ணமாயும் அதிககுளிர்ச்சியாயு மிருந்தால் பித்தரோகமென்றும் கொஞ்சம் குளிர்ச்சியாயிருந்தால் ஸ்லேஷ்மரோகமென்றும் நானாவிதமாயிருந்தால் தொந்தரோகமென்றும் அறியவேண்டும்.

ரூப இலக்ஷணம்.

ரோகியின் தேகம் கறுப்பாயிருந்தால் வாதரோகமென்றும் பச்சையாகவும் சிகப்பாகவுமிருந்தால் பித்தரோகமென்றும் வெளுமையாயிருந்தால் ஸ்லேஷ்மரோகமென்றும் மிஸ்ரவர்ணமா யிருந்தால் தொந்தரோகமென்றும் அறியவேண்டியது.

சப்தஇலக்ஷணம்என்னும் பேச்சையறிதல்.

ரோகி சமமாய்பேசினால் வாதமென்றும் சிரித்துப்பேசினால் பித்தமென்றும் ஹீனஸ்வரமாய்பேசினால் ஸ்லேஷ்மமென்றும் மீசரமாய் மொழியாடினால் தொந்தரோகமென்றும் சொல்லப்படும்.

நாவின் இலக்ஷணம்.

நாவு வாதரோகத்தில்உடைந்து முள்போல் பச்சையாகயிருக்கும் பித்தரோகத்தில் கறுப்பாயிருக்கும் ஸ்லேஷ்மரோகத்தில் வெளுமையாயிருக்கும் சீதளத்தில் முள்ளாகியும் கருப்பாகியுமிருக்கும் தொந்தரோகத்தில் பலவர்ணம்கூடியிருக்கும்.

மூத்திர இலக்ஷணம்.

மூத்திரம் வாதரோகத்தில் வெளுமையாயும் பித்தரோகத்தில் சிகப்பாயும் காமிலாரோகத்தில் பச்சையாயும் ஸ்லேஷ்மரோகத்தில்

வெள்ளையாயும் கோழையாயும் இருக்கும் தொந்தரோகத்தில் பலவி தமுங்காணும்.

நாடி இலக்ஷணம்.

கைபிடித்துப் பார்க்குங்காலத்தில்மூன்றுவிரலால்நாடிப்பார்க்க ஆள்காட்டிவிரலில் வோடும்நாடி வாதமென்றும் நடுவிரலில்வோடும் நாடி பித்தமென்றும் மோதிரவிரலில்வோடும்நாடி சேத்துமமென் றும் சொல்லப்படும். ஆனல் இன்னாடிபெண்களுக்கு இடதுகரமும் புருஷர்களுக்கு வலதுகரமும்பிடித்துப்பார்க்கவேண்டியது.

நாடிபேசும் விதமறிக.

வாதநாடி இலக்ஷணம். அன்னபக்ஷிபோலும் கோழியைபோல வும் மயிலைபோலவும் வாதநாடிநடக்கும்.

பித்தநாடி இலக்ஷணம். ஆமையைப்போலவும் அட்டையை போலவும் பித்தநாடிநடக்கும்.

சேத்துமநாடிலக்ஷணம். தவளையைபோலவும் பாம்பைப்போ லவும் ஸிலேஷ்மநாடி நடக்கும்.

வாதநாடி லக்ஷணத்திற்கூறியபடி மயில்போலவும் சிலேஷ்ம நாடி இலக்ஷணத்தில் கூறியபடி பாம்புபோலவும் பேதித்து நடக்கு மாகில் சிலேஷ்மத்தில் பித்தமெனவறிக.

வாதபித்தநாடி இலக்ஷணம். மந்தமாயும் பிறகு மயில்போலு ம்நடந்தால் வாதபித்தநாடி என்று அறியவும்.

வாதசிலேஷ்மநாடி இலக்ஷணம். கைபிடித்துப் பார்க்கையில் கோழிபோலவும் பிறகு ஆருமீன்போலும் நடப்பது வாத சேத்தும நாடி என்று அறியவும்.

ஆச்சரியநாடி இலக்ஷணம் வாதபித்த நாடிகளைவிட சேத்து மநாடி அதிகமாய் நடந்து பிறகு மெதுவாய்நடந்தால் ஆச்சரியநாடி யென்று சொல்லப்படும்.

மூன்றுநாடிகளும் ருசியறியும்விதமறிக.

தித்திப்பு நாவிலிருந்தால் சேத்துமமென்றும் கசப்பு இருக்கு மாகில் பித்தமொன்றும் புளிப்பு இருக்குமாகில் வாதமென்றும் சொல்லப்படும்.

# நாடிபேதாபேதங்கள்.

## வாதத்தில் வாதம்சேர்ந்தால் உண்டாகும் விதம்.

தேகம் இளைக்கும் குத்தலுண்டாகும் அன்னபட்சிபோல்நாடியோடும் இதையறிந்து சொல்லவும்.

### வாதத்தில்பித்தம் சேர்ந்தால்.

வாய்குளறிபேசுவார் தலைவலியுண்டாகும் குணங்கள் வேறாகும் குடல் முருக்கும் இதையறிந்து வாதபித்தமென்றுசொல்லவும்.

### வாதத்தில் சேத்துமம்சேர்ந்தால்.

இழுப்பு வீக்கம் தலைவலி குணங்கள்வேறாகும் உடல்வெண்மையாகும் நாவு வீக்கமாகி குளறிபேசும் இதையறிந்து வாதசேத்துமமென்று சொல்லவும்.

### பித்தத்தில் பித்தம்சேர்ந்தால்.

தலைசுற்றல் தேகத்தில் இளைப்புண்டாகும் தேகத்தின்வர்ணம் மாறும் தேகம்வாடியிருக்கும் வீக்கமுண்டாகும். இதையறிந்து பித்தத்தில்பித்தமென்று கூறவும்.

### பித்தத்தில் வாதம்சேர்ந்தால்.

மந்தம் கைகால்குத்தல் காய்ச்சலுண்டாகும். கோபமுண்டாகும் இதையறிந்து பித்தவாதமென்றுசொல்லவும்.

### சேத்துமத்தில் வாதம்சேர்ந்தால்.

நரம்புகளில் நோயுண்டாகுவதுடன் அதுபிகுவாய் கம்பிபோல் இருக்கும்துடைமுழுதும் நோயெடுக்கும். நாக்குவாய்குளரும்இதையறிந்து சேத்துமவாதமென்றுசொல்லவும்.

### சேத்துமத்தில் பித்தஞ்சேர்ந்தால்.

சிலசமயம்வாய்கசப்பாயும் சிலசமயம் நாக்கில் புளிப்பும்தட்டும் பேச்சுமாறும் தொண்டையில் கோழைகட்டும் கண்ணில்பீளைசாடும் இதையறிந்து சேத்துமபித்தமென்றுசொல்லவும்.

Page numbering incorrect

### சேத்துமத்தில் சேத்துமபேதம்.

உயிர் அண்வட்டமிடும் இதையறிந்து சேத்துமத்தில் சேத்துமமென்றுகூரவும்.

### நாடிபார்க்கும் காலநிர்ணயம்,

உதயத்தில் சேத்துமம்பேசும் மத்தியானம் பித்தம்பேசும் மாலையில் வாதம்பேசும் இந்நாடிகள் கதித்துப்பேசினால் 4-5-தினத்தில் மரணமென்று எண்ணலாம்.

### நாடியினால்மரண இலக்ஷணமறிக.

நாடியானது போத்துபோல் பின்துள்ளிநடந்தால் அந்த நாடி ஒருமாதத்தில் சுகமாகாவிடில் அவர்களுக்கு பத்துமாதத்தில்மரணமென்று எண்ணலாம்.

### சேத்துமநாடி இலக்ஷணம்.

இந்த சேத்துமநாடியானது குதிரைபோல் நிமிர்ந்தோடிநின்றதைப்பார்த்தவுடன் ஏதும்பேசாமல் ஒருமாதத்தில் மரணமென்று அறிந்துகொள்ளவும்.

### சேத்துமநாடியின் இன்னமோர் இலக்ஷணம்.

சேத்துமநாடியானது மர்மமாய் உஷ்ணமாயும் வெளிப்பட்டால் 7-வதுநாள் மரணமென்றறிந்துகொள்ளவும்.

### சேத்துமநாடியில் இன்னமோர்விதம் காண்க.

அந்நாடியானது தீபத்தின் சுடர்போலாடி பேசினால் அந்நாடியை யுடையவனுக்கு வாழ்நாளதிகமுண்டென்றறிந்து மருந்துதீட்டவேண்டும். அந்நாடியானது தீபதின்சுடரைபோலுங்கூடஆடாவிடில் காலநார் அடுத்துவிட்டாரென்றறிக.

### * இன்னமொருவிதம் மரணகுறியறிக.

கணங்களும் பற்களும் கறுப்பாகிசுவாசமானதுவாயினால்வெளியாகிறொஞ்சில்கபம்கட்டி தொண்டையில் சிலேஷ்மசப்தம் உண்டாகிவிட்டால் எவ்விதமருந்துசெய்தாலும் பலிதமாகாது மேல்மூச்சுகாணும் இக்குணமுடையோர்கள் நிச்சயமாய் மரணமாவார்களென்றறிக.

## வாதநாடி இலக்ஷணம்.

சந்திரனைப்போல நாடிகுளிர்ந்து பேதித்துநின்றால் ஔஷதம் செய்வதிற்பலனில்லை வைத்தியம்பார்க்கக்கூடாது நாடிகாய்ச்சலாய் பேசினல் வாய்வுநிற்கும் மறுநாள் காலையில் பார்க்கவும் அப்பொழுது சேத்துமநாடிகூடிநின்றாலும் மத்யானத்தில் பித்தநாடி துள்ளிநின்றாலும் வாதநாடியில் பலமில்லை மாலையில் மரணமென்றறிந்துகொள்ளவும்.

## சேத்துமநாடி இலக்ஷணம்.

முகம் ஊசிபோல்நீண்டிருந்தாலும் தேகத்தில் நரம்புகள்தெரிந்தாலும் கண்கள்பஞ்சடைந்தாலும்பேச்சுபித்தத்தால்பிதற்றினுலும் இந்த குணங்கள் கண்டவுடன் மரணமென்று தெரிந்துகொள்ளவும்.

## இன்னமோர் குறிகாண்க.

இடுப்புமுதல் துடையும் அதற்குகீழும் நரம்புகள் விரண்டுபதறியோடி தேகமெல்லாம் வீக்கம்கண்டு ஊதி மூன்றுநாடிகளில் ஒன்றுபேசினுலும் தாகமெடுத்தாலும் கண்வாய்கள் பஞ்சடைந்து இருந்தாலும் இவ்விதகுணங்கண்டால் மரணமென்றறிக.

## நாடிபேதத்தால் தேகநிதானம் கண்டறிக.

தேகம் குளிர்ந்தால் வாதமென்றும் மீன் நெய் பாலு இவைகளை மிதமிஞ்சி யுபயோகிப்பதனுல் வாதமதிகரிக்கும் கோழிகறிதின்பதனுல் பித்தமதிகரிக்கும் மரக்கறிபதார்த்தம் தின்பதனுல் வாதமதிகரிக்கும் ஆகையா லிக்குணங்களை யுடையவர்க ளிவ்வித பதார்த்தங்களை அதிகமா யுபயோகித்து இருக்கவேண்டுமென்று எண்ணவேண்டும்.

## ரோக இலக்ஷணம்.

வாதபித்தசேத்துமங்கள் பேதத்தால் வியாதியுண்டாகும் பால்யபிறுயத்தில் வாதமும் யவ்வனபிறுயத்தில் பித்தமும் முதிர்ந்தபிறுயத்தில் சேத்துமமும் அதிகரித்திருக்கும்.

## சாமான்யவியாதி இலக்ஷணம்.

ஆயாசம் உண்டாகுதல் கண்ணைமூடுதல் விசனம் உண்டாகுதல் கோட்டுவாய்விடுதல் ஜலதோஷம் உண்டாகுதல் அளவிர்க்குமேல்

அதிகமூத்திரம் இரங்குதல் சோம்பல் நித்திரை இவைகள் எல்லாம் சாமான்யவியாதியென்றும் இவைகளால் கெடுதிநேருதென்றும் மரணமாகாதுயென்றும் தெரிந்துக்கொள்க.

ஜ்வரஉர்ப்பத்தி காரணங்கள்.

அகாலபோஜனமருந்துதல் கஷ்டமானவேலைசெய்குதல் அதிகமாய் புசித்தல் பலஹீனத்தோடு வேலைசெய்குதல் இத்தோஷங்கள் சேர்ந்து மந்தத்தை உண்டாக்கி காய்ச்சல் உண்டாகசெய்யும்.

வாதகாய்ச்சல் இலக்ஷணம்.

தேகத்தில் குத்தல்கண்களில்நிர்வடிதல் மார்நோயுண்டாகுதல் அவயவங்களில் பிடிப்புண்டாகுதல் சொரி உஷ்ணம் சுவாசம்வாந்தி இவைவுண்டாகும். மூத்திரம்மஞ்சளாயும் மிடுப்புபலவீனமாயும் வயிறுப்பிசம் ருசி தித்திப்பாயும் புளிப்பு பதார்த்தங்கள்மீதுபிரியமும் இவ்விதகுணங்களுண்டாகி யிருந்தால் வாதஜ்வரமென்றறிக.

பித்தஜ்வர இலக்ஷணம்.

ஸ்திரீசாபல்லியம் கொள்ளும் சுவாசமதிகரிக்கும் தலைநோயுண்டாகும் அதிகதாகமுண்டாகும் கபமுண்டுபண்ணும் உருசிமாறும் வாய்கசப்புண்டாகும். தேகத்தில் உஷ்ணமதிகரிக்கும் எப்பதார்த்தங்களின்மீதும் வெறுப்புண்டாகும். மூத்திரம் மஞ்சளாயிரங்கும்நேத்திரத்துக்கு கறுப்பாயும் சிகப்பாயும் இருட்டாயும் தோற்றமுண்டாகும். இக்குணங்களால் பித்தஜ்வரமென்றறிக.

வாதஸ்லேஷ்மஜ்ர இலக்ஷணம்.

தேகத்தில் பிசுபிசுப்பு உருசி உவர்ப்பாய்காணுதல் சிரநோயுண்டாகுதல் சர்வாங்கமும் நோயும் குத்தலும்காணும் கண்களில் நீர்வடியும் வாந்தியுண்டாம் நாசியில் ஸ்லேஷ்மம் உண்டாகும் அதிகதாபமுண்டாகும் நித்திரைபங்கமுண்டாகும் மூத்திரத்தில் நுரைகட்டும் இந்த இலக்ஷணங்களுண்டானால் வாதசேத்தும ஜ்வரமென்றறியவும்.

பித்தஸ்லேஷ்மஜ்வர இலக்ஷணம்.

பச்சை நீலம் கறுப்பு மஞ்சள்முதலாகிய பலவித வருணங்கள் நேத்திரத்திற்கு தோற்றும் தேகத்தில் நடுக்கமுண்டாகும் வாய்ருசி

யறியாமலிருக்கும் கசப்பாயும் உப்பாயும்வாயில்காணும் பித்தத்தால் தேகத்தில் எரிச்சல்காணும் கண்டத்தில் கபம்கட்டி அதனால் நித்திரைபங்கமாகும் வாந்தி மூத்திரம் இவைகள் சிகப்பாயும் வெள்ளையாயும்தோன்றும் இவ்வித இலக்ஷணங்களால் பித்தஸ்லேஷ்ம ஜ்வரமென்றறியவும்.

ஜன்னிபாதகாய்ச்சலில்இலக்ஷணம்.

இருமல் சுவாசம் காமம் ருசியில்லாமை பிரமை செவியிரைச்சல் நித்திரைபங்கம் மந்தம் சிரசிலும் கீலகளிலும் நோயுண்டாகுதல் தேகம் ஓர்சமையத்தில் உஷ்ணமாயிருத்தல் ஒருசமயத்தில் சீதளமாயிருத்தல் கபம்கட்டுதல் நேத்திரத்தில் ஜலம்வடிதல் கண்கள்சிகப்பாயிருத்தல் அழுகையுண்டாகுதல் இவ்வித இலக்ஷணங்களால் ஜன்னிபாதஜ்வரமென்றறிக.

ஜன்னிபாதகவிபரங்கள்.

சந்திகம் அந்தகம் ஶ்ர்தாகம் சித்தவிப்ரமம் பச்சினநேத்ரம் ரத்தோஷ்ணம் பிரலாபம் ஜிவ்வஹசம் அபிநாசம் சீதாம்சம் தாந்திரகம் கண்டகுட்டம் கர்னிகம் என்று பதிமூன்றாகவிளங்கப்படும். இதில் ஆறுசாத்தியம் ஏழு அசாத்தியம்.

சந்திகஜன்னி இலக்ஷணம்.

தேகம் எப்போழுதும்போலிருத்தல் அதில் சூலையுண்டாகுதல் தேகத்தில் வீக்கம்காணல் இருமலுண்டாகுதல் நித்திரை யதிகரித்தல் அதிகதாபமுண்டாகுதல் இக்குணங்களால் சந்திகஜன்னிதோஷமென்றறிக.

அந்தகஜன்னி இலக்ஷணம்.

அதிகதாபம் புத்திசாபல்யம். ஹீனஸ்வரம். வமனம் காய்ச்சல் இக்குணங்களால் அந்தகஜன்னி தோஷமென்றறிக.

ஶ்ர்தாகஜன்னி இலக்ஷணம்

ஹீனஸ்வரம் அதிகதாபம் கண்டம் பிடரிஇவைகளில் நோயுண்டாதல் உதடுவளர்தல் இருமல் கழுத்தில் வேர்வைபிடித்தல் இக்குணங்களால் ஶ்ர்தாகஜன்னி இலக்ஷணமென்றறிக.

### சித்தவிப்ரமஜன்னி இலக்ஷணம்.

தேகமுழுதும் நோயுண்டாதல் வாதபித்தம்பேதித்துக்காணுதல் பிரமித்துப்பார்த்தல் இக்குணங்களுண்டானல் சித்தவிப்ரம ஜன்னிதோஷமென்றறிக.

### பச்சினநேத்திரஜன்னியிலட்சணம்.

கண்கள்சிகப்பாகி தெரிப்பதுபோலிருத்தல் நேத்திரத்தில் நீர்வடிதல் பார்வையற்றிருத்தல் தேகததில் நடுக்கமுண்டாகுதல் இக்குணங்களால் பச்சினநேத்திரஜன்னிதோஷ மென்றறிக.

### இரத்தோஷ்ண ஜன்னியிலட்சணம்.

நாக்குஉதடு வெடித்துஇரத்தம்வெளியாதல் இருமல்காணுதல் தலைநடுக்குதல் தேகத்தில் நடுக்கமுண்டாகுதல் நாவுகருத்துமுள்கள் கிளம்பியிருத்தல். இக்குணங்களுண்டானல் இரத்தோஷ்ணஜன்னிதோஷமென்றறிக.

### பிரலாபஜன்னி இலக்ஷணம்.

இருமலுண்டாகுதல்ஹீனஸ்வரமாய்ப்பேசுதல்அதிகதாபம் காணுதல் வாதசேத்துமம் பேதமாதல் தாபசுரமுண்டாகுதல் இவ்வித குணங்களுண்டானல் பிரலாப ஜன்னிதோஷமென்றறிக.

### ஜிவ்ஹகஜன்னி இலக்ஷணம்.

தாபம் இருமல் நாக்குமுள்போல் மரமரப்பாய் கறுப்பு உண்டாதல் செவிஅடைப்பு இவ்விதகுணங்களுண்டானல் ஜிவ்ஹகஜன்னிதோஷமென்றறிக.

### அபிநாசஜன்னி இலக்ஷணம்.

வாதபித்தசேத்துமம் ஒன்றாய்ப்பேசுதல் முகம்மேன்மையாயிருத்தல் அதிகநித்திரையுண்டாதல் தேகம்நோயெடுத்தல் பலஹீனமாதல் தாகம் வியர்வை இக்குணங்களுண்டானல் அபிநாசஜன்னிதோஷமென்றறிக.

### சீதாங்கஜன்னி இலக்ஷணம்.

தேகம் குளிர்ந்திருத்தல் இருமலுண்டாகுதல் மேன்மூச்சுவாங்கல் கீல்களில் நோயுண்டாகுதல் வாந்தி தாபம் மூர்ச்சை உண்டாகு

தல் விரோசனமாகுதல் தேகநடுக்கல் இக்குணங்களால் சீதாங்க ஜன்னிதோஷமென்றறிக.

### தாந்திரிகஜன்னி இலக்ஷணம்.

நித்திரையுண்டாகுதல் நாவுமுள்ளிளம்பி கறுப்புவர்ணமாகிமெதுவின்றி ஊலமற்று உணர்ந்து இருத்தல் அதிகதாபமுண்டாகுதல் விரோசனமாகுதல் ஜ்வரமதிகரித்தல் நேத்திரத்தில் நீர்வடிதல் இக்குணங்களால் தாந்திரிக ஜன்னிதோஷமென்றறிக.

### கண்டகுட்பஜன்னி இலக்ஷணம்.

அதிகதாபம் சிரநோய் தாமூர்ச்சை தேகம் நோயெடுத்தல். இருமல் வாந்தி இக்குணங்களால் கண்டகுட்பஜன்னி தோஷமென்றறிக.

### கர்ணிகஜன்னி இலக்ஷணம்.

நாக்குவெடித்து இருமல் நடுக்கல் காதுஞணிவீக்கம் இதுவுண்டானல் கர்ணிகஜன்னிதோஷமென்று அறிந்துக்கொள்ளவும்.

### சாத்தியஜன்னி விபரம்.

சந்திகம் தாந்திரிகம் பிறபாபம் சித்தவிப்ரமம் ஜ்வஹூசம் கர்ணிகம் இந்த (6) ஜன்னிகளும் சாத்தியமானவைகளென் றறிந்து கொள்ளவும்.

### அசாத்திய ஜன்னிவிபரம்.

வர்தாகம் அந்தகம் பச்சினநேத்திரம் கண்டகுட்பம் இரத்தோஷ்டம் சீதாங்கம் அபிநாசம் இந்தயேழும் அசாத்தியமென்று அறிந்துக்கொள்ளவும்.



## ஜன்னிதோஷங்களுக் காலப்பிரமாணம்.

| நெ. | ஜன்னிகளின்பெயர். | மாதம். | தினம். |
|---|---|---|---|
| 1 | சந்திகம் | ,, | 7 |
| 2 | அந்தகம் | ,, | 10 |
| 3 | வ்ர்தாஹம் | ,, | 20 |
| 4 | சித்தவிப்ரமம் | ,, | 21 |
| 5 | சீதாங்கம் | ,, | 15 |
| 6 | தாந்திரிகம் | ,, | 25-அல்லது-7 |
| 7 | கண்டகுப்பம் | ,, | 13 |
| 8 | கர்ணிகம் | 3 | ,, |
| 9 | பச்சினநேத்திரம் | ,, | 8 |
| 10 | இரத்தோஷ்டம் | ,, | 10 |
| 11 | பிரபாபம் | ,, | 14 |
| 12 | ஜிவ்ஹசம் | ,, | 16 |
| 13 | அபிஞசம் | ,, | 15 |

இந்த (13) ஜன்னிதோஷிங்களுக்கும் மேல்கூறியநாள்கள் காலநிர்ணயமென்று அரிந்துக்கொள்ளவும்.

---

# ஔஷதசுத்திசெய்யும்

## விபரம்.

இங்குலிங்கசுத்தி.

1-பலம் ஜாதிலிங்கம் கொண்டுவந்து அதை குப்பைமேனியிலை யை அரைத்து கவசம்செய்து நிழலில் 3-தினம் ஆரவைத்து பிறகு அவிழ்த்து முலேபாலில் ஊறவைத்து யெடுத்தால் சுத்தியாகும்.

இன்னமோர்விதம்.

பழச்சாற்றுலாகிலும் அல்லது முலேபாலிலாகிலும் வேகவைத் தெடுக்க சுத்தியாகும்.

நெல்லிகாய் கெந்தகசுத்தி.

1-பலம் கெந்தகம் கொண்டுவந்து பசுவின்நெய்விட்டு இரும்பு கரண்டியில்உருக்கிஆவின்பாலில் 7-விசைகொட்டினுல் சுத்தியாகும். இவ்விதம் சுத்திசெய்த கெந்தகம் ஔஷதங்களுக்கு அதிகபிரயோஜனப்படும்.

இன்னமொருவிதம்.

இரும்புசட்டியில் கெந்தகத்தைபோட்டு சிற்றுமனக்கெண்ணை விட்டு உருக்கி ஆவின்பாலில் 7-தடவை சாய்க்க சுத்தியாம்.

மனேசிலே சுத்தி.

1-பலம் மனேசிலையை சிறுதுண்டுகளாய் நருக்கி வெள்ளாட்டின்கோமயத்தை ஒருபாண்டத்தில்விட்டு அதில் அந்த மனோசிலையை மெல்லியதுணியில்முடிந்து தோலாந்திரமாய்கட்டி தொங்கவிட்டு அடுப்பில் வைத்து காய்ச்சியெடுத்து மருபடியும் கொள்ளுவெந்த தண்ணீரால் வேகவைத்து யெடுக்க சுத்தியாகும்.

தாளக சுத்தி.

1-பலம் தாளத்தைஎடுத்து காடிதண்ணீர்அல்லது சுண்ணாம்பு நீரிலாவது 3-நாள் ஊறவைத்துயெடுக்க சுத்தியாகும்.

இன்னமோர்விதம்

ஒருபலம் தாளகத்தை சிருதுண்டுகளாக்கி வெள்ளைப்பிடவை துண்டுகளில் இரண்டுதுண்டுகளைவிரித்து அதில் தாளகத்தைவைத்து மூட்டையாய் கட்டி பசுவின்கோமயத்தில் தோலாந்திரம் கட்டி அடுப்பில்வைத்து மூன்றுதடவை கோமயத்தை புதுப்பித்து எரிக்க சுத்தியாம்.

நாகசுத்தி.

ஒருபலம் நாகத்தையுருக்கி வெள்ளெருக்கம்பால் அல்லது பழரசம் அல்லதுகாடி இவைகளில் எதிலாகிலும் ஒன்றில் 7-தடவையுருக்கிசாய்க்க சுத்தியாம்.

அயப்பொடிசுத்தி.

அயச்சட்டியில் ஒருபலம் எள்ளெண்ணைவிட்டு அதில் 5 பலம் அயப்பொடியைபோட்டு வருத்துஎடுத்து கரும்வேலம்பட்டை சாதித்தல் 2-ஜாமம் ஊரவைத்து காடிஜலத்தால்கழுக சுத்தியாம்.

வெள்ளைப்பாஷாணசுத்தி.

வெள்ளைப்பாஷாணம் ஒருபலத்தை கோதுமை மாவை ஜலம் விட்டுபிசைந்து அதர்க்குள் பாஷாணத்தைவைத்து கவசம்செய்து வெள்ளாட்டின்கோமயத்தில் தோலாந்திரம்கட்டி எரித்து எடுக்க சுத்தியாம்.

கௌரிபாஷாணசுத்தி.

கௌரிபாஷாணம் ஒருபலமிடையை எலுமிச்சம்பழ ரசத்தில் ஒருநாள் ஊரவைத்து மறுநாள் துணியில்கட்டி சுண்ணாம்புதண்ணீ ரில் தோலாந்தரம்கட்டி 4-ஜாமம் எரித்து எடுக்க சுத்தியாம்.

செப்புதொட்டிபாஷாணசுத்தி.

தொட்டிபாஷாணம்பலம் ஒன்றை தூளாய்பொடித்து பழரச த்தில் சற்று அரைத்து துணியில்முடிந்து பசுவின் கோமயத்தில் 3-தடவைதோலாந்திரம்கட்டி எரிக்க சுத்தியாம்.

ஊமத்தைவிரைசுத்தி.

ஊமத்தைவிரை பலம் ஒன்றை அதுமுழுக பழரசம் விட்டு ஒருஜாமம் ஊரவைத்து எடுக்க சுத்தியாம்.

முஷ்டிகொட்டைசுத்தி.

ஷை கொட்டை எவ்வளவோ அவ்வளவும் முழுகசிருகீரைவே ரின்ரசம்விட்டு ஒருஜாமம்வேகவைத்து எடுக்க சுத்தியாம்.

வாளசுத்தி.

நேர்வாளத்தையுடைத்து மேல்தோல்நீக்கி பருப்பை எடுத்து எருமைசாணத்தில் ஓரிரவு ஓர்பகல் ஊரவைத்து அப்படியே அடுப் பில்வைத்து நன்ருய்கொதித்தபின் இரக்கி கழுகிமறுபடி ஷை பருப் பை கோதுமைநொய் கஞ்சியில் வேகவைத்துகழுகி நடுவில் உள்ள இலேயும் துணியில் உள்ளமுளையும் நீக்க சுத்தியாம்.

ஷை சுத்தி இன்னமோர்விதம்.

உடைத்துதோல்நீக்கிய வாளத்தை எருமைசாணத்தில் வேக வைத்து இலேமுளைநீக்கி கைத்தாளை ரசம் ஆவின்பால் மேற்படிநெய் இவைகளில் தனித்தனிவேகவைக்க சுத்தியாம்.

### சவ்வீரசுத்தி.

சவ்வீரத்தை பானையுடைந்த ஓட்டில்வைத்து ஈருள்ளி ரசத்தால் ஓர்பகலும் தேனால் ஒருபகலும் சுருக்கு கொடுக்கசுத்தியாம்.

### அபிரேக்குசுத்தி.

அபிரேகை வாயகண்ட பாண்டத்தில்வைத்து அபிரேக்குக்கு சுத்திலும் தீயிட்டு ஊதி ரேக்கு சிவக்கும்வரையில் தீயைவளர்த்தி எடுத்துபசுவின்பாலில் நனைத்து ரேக்கைப்பிளந்து புளியம்இலைரசம் சிறுகீரைரசம் சீந்திற்கொடிரசம் இம்மூன்றுரசங்களிலும் சமபாகமெடுத்து ஒன்றாய்கலந்து அபிரேக்கை இதில்ஒருநாள் ஊரவைத்து எடுக்க சுத்தியாம்.

### ஷை சுத்தி இன்னபோர்விதம்.

ஓருவீசை அபிரேக்கை ஒருமண்ஜாடியில் பரத்தி அதன்மேல் 3-படி பசுவின்மூத்திரம்விட்டு அடுப்பில்வைத்து 2-படி ஜலம்வற்றியபின் எடுத்து ரேக்கை கரிநெருப்பின்மேல்வைத்து சுணையுள்ள நெல்லை அதில்போட்டு பொரித்து அப்படியேதீயில்வைத்துவிடவும் தீயாரியபின் மறுநாள்எடுத்து காடியில்ஊரவைத்துஎடுத்து நசிக்கினல் பொடியாகும் அப்படிபொடியாக கண்டால் சுத்தியாகிவிட்டது இப்படி சுத்தியானல் செந்தூரங்களுக்குபபோகமாகும்.

### கருவங்கசுத்தி.

எருகை ஊமத்தை பருத்தி கள்ளி சித்திரைமூலம் பிரண்டை இவைகளின் சமூலமும். வகைக்கிசமனிடைமோர்விட்டிடித்து ரசம்பிழிந்து மேற்படி ரசத்தில் வங்கத்தையுருக்கி 5-தடவை சாய்க்க சுத்தியாம்.

### வெள்ளி ஈய்யசுத்தி.

நொச்சிவேர்பட்டையை எருக்கம்பாலாலரைத்து இய்யத்திர்க்குகவசம்செய்து வெய்யலில்காயவைத்து அப்படியே உருக்கி நொச்சி இலைச்சாற்றில் 7-தடவைச்சாய்க்க சுத்தியாம்.

### காந்தசுத்தி.

காந்தத்தை பழரசத்திலும் கிழாயிலைசாற்றிலும் புளித்தமோரிலும் தனித்தனி 7-மணிநேரம் வெய்யலில்வைக்க சுத்தியாம்.

### தாம்பூரசுத்தி.

செம்புதகட்டை கத்தரித்து பசுவின்கோமயத்தில் போட்டு தீபாக்கினியால் ஒருஜாமம் எரித்து எடுக்க சுத்தியாம்.

### மேற்படிசுத்தி இன்னமோர்விதம்.

ஒருபலம் தாம்பூரதை மெல்லியதகடாக தட்டி சிவக்கக் காய்ச்சி புழித்தமோர் எருக்கம்பால் எள் எண்ணெய் பழச்சார் ஆவின் பால் இவைகளில் தனித்தனி ஒவ்வொன்றிலும் 7-தடவை நனைத்து எடுத்து பொன்னுங்காணி சாற்றால் சுருக்குகொடுத்து எடுக்கசுத்தியாம.

### வெள்ளிசுத்தி.

வெள்ளியைமெல்லிய தகடாய்தட்டி சன்னமாய்நறுக்கி வாழைக்கிழங்குரசத்தால் 7-தடவை கழுகசுத்தியாம்.

### தங்கசுத்தி.

தங்கதகட்டை காவிமண்ணையரைத்து கவசம்செய்து உமியில் வைத்து ஊதிசிவந்தபின் எடுக்கசுத்தியாம்.

### நல்முத்து நற்பகழம் இவைகளின்சுத்தி.

ஒருபாண்டதகில் தழுதாளைரசம்விட்டு மேற்படி சாக்குகளை துணியில்முடிந்து தோலாந்திரம்கட்டி எரிதது எடுக்க சுததியாம்.

### அன்னபேதி, பலகரை, சங்கு, வெங்காரம், சிகப்புகாவிக்கல் இவைகளின்சுததி.

இவ்வஸ்துகளை அவ்வவ்வஸ்துக்கள்முழுக பழரசம்விட்டு ஊரவைதது அப்படியே ரசம்சுண்டும்வரையில் உலரவைததுஎடுக்க சுததியாம்.

### திரிகடுகு திருபலாதிசுத்தி.

இவைகளை வெய்யலில் 3-நாள் காயவைததாலும் அல்லது இளம்வருப்பாய்வருததாலும் சுததியாம்.

### சூரணங்களின் சுத்தி.

இடித்து வஸ்திரகாயம்செய்த சூரணங்களைஓர்சட்டியில் பசுவின்பால்விட்டு அச்சட்டிவாய்க்கி துணிகட்டி துணி பாலில்படாமல்

கட்டி அதில் சூரணத்தைகொட்டி பிட்டவித்து வெய்யலில்காயவை த்தெடுக்க சுத்தியாம்.

பூ ர சு த் தி.

பூரத்தை சிறுதூளாய் நறுக்கி துணியில் முடிந்து மிளகுகிஷாயம் வெத்திலைரசம் இவைகளை சமனாய் கலந்து ஓர் பாத்திரத்திரத்தில்விட்டு அதில் சரகை தோலாந்திரமாய் 3-நாள் தொங்கவிட சுத்தியாம்.

முருதார்சிங்கு சுத்தி.

இதை வெள்ளாட்டின் கோமயத்தில் 1-மணிநேரம் வேகவைத்து எடுக்க சித்தியாம்.

க ல் நா ர் சு த் தி.

கழுதை மூத்திரத்தில் மூன்றுநா ளூறவைத்தெடுக்க சுத்தியாகும்.

ஷை சுத்தி இன்னமோர்விதம்.

சிறு ஆண்குழந்தை மூத்திரத்தில் 3-நாள் ஊரவைத்தெடுக்க சுத்தியாம்.

மயில்துத்தம் சுத்தி.

பசுவின் மோரில் ஒருஜாமம் இச்சரகை எரித்து எடுக்க சுத்தியாம்.

பால்துத்தம் சுத்தி.

சிறுஆண்குழந்தை நீரில் 7 நாள் இச்சரகையூரவைத்து பிறகு பசுவின்பாலில் அவித்து எடுக்க சுத்தியாம்.

சிவதைவேர் சுத்தி.

சிவதைவேரை பாலிலவித்து வெய்யலில்காயவைக்க சுத்தியாம்.

அசுவகெந்திகிழங்கு சுத்தி.

இதை பசுவின்பாலிலவித்து எடுக்க சுத்தியாம்.

மி ள கு சு த் தி.

மிளகை புளித்தமோரில் 3-நாள் ஊரவைத்து ஓட்டிலிட்டு வறுத்துஎடுக்க சுத்தியாம்.

சு க் கு சு த் தி.

சுக்குமேல் தோல் நீக்க சுத்தியாம்.

திப் பி லி சு த் தி.

பழரசத்தில் ஒருநாளூரவைத்தெடுக்க சுத்தியாம்.

ஓ ம ம் க த் தி.

இதை சுண்ணும்புதண்ணீரில் ஒருஜாமம் ஊரவைத்தெடுக்க சுத்தியாம்.

சீ ர க ம் சு த் தி.

இதை சுண்ணும்பு ஜலத்தில் 7-ஜாமம் ஊரவைத்தெடுக்க சுத்தியாம்.

அ ர க் கு சு த் தி.

சுத்தஜலத்தில் 3-தடவை வேகவைதது எடுக்க சுத்தியாம்.

மாசகாய்சுதி.

பசுவின்நெய்யில் வருத்தெடுக்க சுத்தியாம்.

ஜாதிக்காய் சுத்தி.

பசுவின்பாலில் வேகவைத்து வெய்யலில்காயவைக்க சுத்தியாம்.

எ ள் ளு சு த் தி.

சுத்தஜலத்தில் 4-ஜாமம் ஊரவைத்து பிசைந்து கழுகி மேல் தோல் நீக்கி காயவைக்க சுத்தியாம்.

ஒவ்வொரு சரக்கையும் சுத்திசெய்தபின் கழுகி எடுக்கவேண்டியவைகளை கழுகியும் சும்மாஎடுக்கவேண்டியவைகளை சும்மாவும் எடுத்துக்கொள்ளவும்.

---



# ஔஷதங்கள் செய்யும்

## விபரம் பற்பபாகம்.

### ரசபற்பம்செய்யும் விதம்.

ஒருபலம்ரசத்தை. விடதாரை ரசத்தால் நாலுசாமம் ஆனெநெருஞ்சில்சாற்றால் நாலுஜாமும் அரைத்து ஷை இரண்டுதினிசுஇலைளையும்அரைத்தசாந்தினல் அந்தபாதரசத்தை கவசம்செய்து ஏழு சீலைசெய்து கபோதபுடமிட பற்பமாம்.

### இதனால்தீரும் வியாதிகள்.

மேகம் மேகவிரணம் பார்சவாய்வு இவைதீரும் அனுபானம் தேனில் இரண்டு அரிசியிடைகொடுக்கவேண்டும். பத்தியம் வியாதிக்குத்தக்கபடி பத்தியம்வைக்கவும்.

### தாம்பூரபற்பம்.

சுத்திசெய்த தாம்பூரம்பலம் ஒன்றெடுத்து சிகப்பு சித்திரமூல இலையையரைத்து கவசமிட்டு மூன்றுசீலைசெய்து மகாபுடமிட பற்பமாம்.

### இதனால்தீரும் வியாதிகள்.

சகலகுஷ்டமும்தீரும் அனுபானம் தேனில் இரண்டு குண்டுமணியிடை கொடுக்கவேண்டும். பத்தியம் பாசிப்பயர் பச்சையரிசிகஞ்சி நெய் இவைகளைகொடுக்கவும்.

### வெள்ளிபற்பம்.

ஒருவிராகனிடை சொக்கவெள்ளியை தகடுதட்டி துண்டுகளாய் நறுக்கி சிறுமண்குடுவையில்போட்டு குடுவைநிரைய சிவகரந்தைசார் விட்டு குடுவைவாய்க்கி சில்லுமூடி நாலு ஐந்து சீலைசெய்து இருபத்தைந்துவிராட்டியில் புடமிட பற்பமாகும்.

### இதனால்தீரும் வியாதிகள்.

மேகம் கருமேகம் இவைதீரும் அனுபானம் தேனில் மூன்று குண்டுமணியிடை கொடுக்கவும். பத்தியம் நெய் பால் ஆட்டிறைச்சி இவைகளை அதிகமாய்சேர்க்கவும்.

சவ்விரபற்பம்.

ஒருபலம் சவ்விரத்தை வெள்ளைகாட்டாமணக்கு பாலால் நாலுஜாமமரைத்து பேற்படி இலையயரைத்து முன் பால்விட்டரைத்த சவ்விரத்திற்கு கவசம்செய்து ஏழுசீலை வலுவாய்செய்து கபோதபுடமிட பற்பமாகும்.

இதனால்தீரும்வியாதிகள்.

சகலமேகவியாதியும் விஷகாய்ச்சலும் தீரும் அனுபானங்கக்கு மிளகு கஷாயத்திலாவது தேனிலாவது ஒருகுண்டுமணி இடைகொடுக்கவும் பத்தியம் ரோகத்தின்நிதானமறிந்து புளி உப்பு இவைகளை மூன்றுநாள்நீக்கி மருபத்தியம் மூன்றுநாள் வருத்த உப்புகட்டபுளி சேர்த்து ஏழாவதுநாள் ஸ்நானம்செய்யவும்.

வெள்ளிஈய பற்பம்.

| | | | |
|---|---|---|---|
| வெள்ளி ஈய்யப்பலம் | 3 | பாதரசம்விராகனிடை | 1 |
| கஞ்சாதூள்பலம் | 6 | மஞ்சள்தூள்பலம் | 6 |

செய்முறை ஈயத்தையுருக்கி ரசத்தைதொந்தித்து தூளாய் சொருக்க எடுத்துக்கொண்டு புளியமரபிருணியில் மூன்றுபடி பிருணியைஒருசட்டியில்போட்டு பரத்தி அதன்மேல் மூன்றுபலம் மஞ்சள் தூளடுவில்பரத்தி அதன்மேல் மூன்றுபலம் கஞ்சாதூள்பரத்தி அதன்மேல்தொந்தித்துஇருக்கும் ஈயத்தைவைத்து அதன்மேல் மூன்று பலம் கஞ்சாதூள்பரத்தி அதன்மேல் மூன்றுபலம் மஞ்சள்தூள்பரத்திஅதன்மேல்மூன்றுபடி புளியம்பிருணிகொட்டி மேல்சட்டி மூடிசீலைசெய்து பெரியவிராட்டி 75 ல் புடமிடபற்பமாம். ஆறியபின் எடுக்கவும்.

இதனால்தீரும்வியாதிகள்.

சகலமேகவியாதியும்தீரும் அதாவதுமூலம் இரத்தமூலம் உள்மூலம்பௌத்திரம் மேகவெள்ளை இவைதீரும் அனுபானம் தேனில் குண்டுமணியிடை கொடுக்கவும் பத்தியம் வியாதியின்கூரறிந்து பத்தியமிடவும்.

துருசுபற்பம்.

சுத்திசெய்ததுருசுபலம் ஒன்றுக்குஅதன்மேல் கல்சுண்ணாம்பு கவசம்செய்து அதன்மேல் காவிகல்லரைத்து சீலைக்கிதடவி மூன்று சீலைசெய்து ஒன்றரைபடி நெல்உமியில் புடமிடபற்பமாகும்.

## இதனால்தீரும்வியாதிகள்.

க்ஷயம் உள்காய்ச்சல்தீரும் அனுபானம் தேனில் அரைகுண்டு மணி இடை கொடுக்கவேண்டியது பத்தியம் இச்சாபத்தியம்.

## பகழுபற்பம்.

| | | |
|---|---|---|
| பகழுக்கொடி | பலம் | 3 |
| கற்பூரசலாசத்து | பலம் | 1½ |

செய்முறை இவ்விரண்டுசரக்கையும் கல்வத்திட்டு பொடிசெய்து புளியம் இலைசார்விட்டரைத்து பில்லைசெய்து ஓட்டில்வைத்து மேலோடுமூடி ஒருசீலைசெய்து 15-விராட்டியில்புடமிட்டுஎடுத்துபிரண்டைசாற்றாலாட்டி பில்லைசெய்து 15-விராட்டியில்புடமிட்டு எடுத்து பழரசத்தாலாட்டி பில்லைசெய்துமுன்போல் 15-விராட்டியில்புடமிட்டெடுத்து அரைத்து புட்டியில்வைத்துக்கொள்ளவும்.

## இதனால் தீரும்வியாதிகள்.

மேகவெட்டை நீர் கடுப்பு வயிற்றுநோய் இவைதீரும் அனுபானம் தேன் அல்லது நெய் இவைகளில் இரண்டு குண்டுமணியிடை கொடுக்கவும். பத்தியம். மீன்கருவாடுகத்தரிக்காய் புடலங்காய்இவையாகாது.

## இன்னமோர்விதம் பகழுபற்பம்.

வேலிபருத்திஇலை, குப்பைமேனிஇலை, கோவையிலை, முருங்கைஇலை, நொச்சிஇலை, இவைகளையெல்லாம் ஒன்றாயரைத்து பகழுத்திற்கு கவசம்செய்து 5-சீலைசெய்து வராகபுடமிட பற்பமாம்.

## இதனால்தீரும்வியாதிகள்.

நீர்சுருக்கு அதிக உஷ்ணம் வெள்ளை இவைதீரும் அனுபானம்நெய்யில் வெண்ணெயில் இரண்டுகுண்டுமணியிடை சாப்பிடவும். பத்தியம் இச்சாபத்தியம்.

## அண்டபற்பம்.

ஒருகோழிமுட்டை யின்நுனியில் சிறுதுவாரம்செய்து அதில் 5-6-துளி காட்டுசிருகீரை ரசம்விட்டு ஷை சிருகீரையை அரைத்து

முட்டைக்கி கவசம்செய்து 3-சீலை அதன்மேல்செய்து 10-விராட்டியில் புடமிட பற்பமாம்.

இதனால் தீரும்வியாதிகள்.

விரைநோய் அண்டவாய்வு இவைகள் தீரும்.

அனுபானம்.

தேனில் ஒருகுண்டுமணி இடை கொடுக்கலாம். பத்தியம் வியாதியறிந்து பத்தியமிடவும்.

சங்குபற்பம்.

சங்குபலம் ஒன்று, வேலிபருத்தியிலை, குப்பைமேனியிலை, கோவையிலை, முருங்கைஇலை, நொச்சிஇலை, செய்முறை சுத்திசெய்த சங்குஒருபலத்தை முற்கூறிய ஐந்துவகை பச்சிலைகளையும் வகைக்கி சமனிடையரைத்து சங்கின்மேல் கவசம்செய்து அதன்மேல் ஐந்துமண்சீலைசெய்து ஐம்பதுவிராட்டியில்புடமிட பற்பமாம் இதனால்தீரும்வியாதியாவன நீர் அடைப்புநீர் சுருக்கு நீரெரிச்சல்வெட்டை மஞ்சள்வெள்ளை மேகவெள்ளைமுதலாகியவைதீரும்.

அனுபானம்.

தேனில் அரைகுண்டுமணி இடைகொடுக்கவும் பத்திரம் இச்சாபத்தியம்.

சலாசத்துபற்பம்.

சலாசத்துபலம் ஒன்று, வேலிபருத்திஇலை குப்பைமேனி, இலை கோவைஇலை, முருங்கைஇலை, நொச்சிஇலை, செய்முறை சுத்திசெய்தசலாசத்து ஒருபலத்தை முற்கூறிய ஐந்துவகைமூலிகையும்வகைக்கி சமனிடை அரைத்து சலாசத்திற்கு கவசமிட்டு அதன்மேல் 2-மண்சீலைசெய்து வராகபுடமிடபற்பமாகும்.

இதனால்தீரும்வியாதிகள்

முற்கூறிய மேகங்களும் நாள்பட்டமேகவெள்ளையும் மேகவாய்வும்தீரும்.

அனுபானம்.

தேனில் அரைகுண்டுமணியிடை கொடுக்கவும் இச்சாபத்தியம்.

நவநீதபற்பம்.

படிகாரம்பலம் 1 பசுவின்வெண்ணெபலம் 1 செய்முறை வெண்ணெயை நான்குஜாமம்நேரம் மண்சுவற்றில்தடவிவைத்து வெண்ணெயில் உள்ள ஜலம்யாவும் சுவற்றில் சுவரியபின் வெண்ணெயைவழித்து ஓர் சிருகுடுவையில்பாதி வெண்ணெயைப்போட்டு அதன்மேல் படிகாரத்தைவைத்து மற்றபாதிவெண்ணெயையும் அதன்மேல்வைத்து மேல் ஓடுமூடிசீலைமண்மூன்றுசெய்து ஐம்பதுவிராட்டியில் புடமிட பற்பமாம்.

இதனால்தீரும்வியாதிகளாவன.

நீரடைப்பு நீர்கட்டு வீக்கம் மேகவெட்டைகளும் தீரும் அனுபானம் தேனில் ஒருகுண்டுமணி இடை கொடுக்கவும். பத்தியமில்லை.



## வஸ்துக்களினுடைய துர்க்குண நிவர்த்தி.

முதல்பாராவில்கண்ட வஸ்துக்களுடைய துர்க்குணங்களை இரண்டாவதுபாராவில் காணும்வஸ்துக்கள் சமதாயபடுத்துமெனக்காண்க.

| 1<br>முதல்பாரா. | 2<br>இரண்டாம்பாரா. |
|---|---|
| அகத்தியிலை ... ... | பசும்பால் |
| மொச்சைகொட்டை ... ... | சீரகம் மிளகு உப்பு |
| வாழைக்காய் ... ... | மிளகு சீரகம் |
| வாழைபிஞ்சு ... ... | மிளகு நெய்பாதம்எண்ணெய் |
| இஞ்சி ... ... ... ... | தயிர் பாதம்பருப்பு பசுநெய் |
| அரிதாரம் ... ... ... | பசுநெய் பாதம்பருப்பு |
| அகர்சக்கை ... ... ... | கர்பூரம் |
| அக்ராகாரம் ... ... | பாதம்பிசின் திராக்ஷை |
| அசாரூன் ... ... | திராக்ஷை |
| அதிமதுரம் ... ... | ரோஜாப்பூ |
| அபின் ... ... | மிளகுலவங்கபட்டை |
| இருப்பு ... ... | நெய்பால்மாமிசம் |
| ஆலுபுகாரா ... ... | குல்கந்து |
| கடுகு ... ... | பாதம்எண்ணெ |
| ஜாதிலிங்கம் ... ... | பசும்பால் முசல்பால் |
| பெருங்காயம் ... ... | மாதளம்பழம் |
| ஊமத்தைவிரை ... ... | மிளகுசோம்புதேன் |
| உளுந்து ... ... | நெய்யும் ஜீர்ணவஸ்துக்களும் |
| கொள்ளு ... ... | நெய்புளி |
| உருளைக்கிழங்கு ... ... | இஞ்சிபுதினபழரசம் |
| ஈருள்ளி ... ... | உப்பு |
| சிகப்புமுள்ளங்கி ... ... | குல்கந்து |
| கரிவேப்பிலை ... ... | நெய்வெண்ணை |
| துவரை ... ... ... | நெய்புளி |
| கருணைக்கிழங்கு ... ... | நெய்புளி |
| கர்ப்பூரம் ... ... | கஸ்தூரி |

## வஸ்துக்களினுடைய துர்க்குண நிவர்த்தி.

முதல்பாராவில்கண்ட வஸ்துக்களுடைய துர்க்குணங்களை இரண்டாவதுபாராவில் காணும்வஸ்துக்கள் சமதாயகிடுத்துமெனக்காண்க.

| 1<br>முதல்பாரா | 2<br>இரண்டாம்பாரா |
|---|---|
| காப்பிக்கொட்டை ... ... | பசுநெய்சக்கரை |
| குங்குமப்பூ ... ... | அனிசூன் |
| கோஷ்டம் ... ... | அனிசூன் |
| கசகசா ... ... ... | தேன்ரூமிமஸ்தகி |
| கெச்சைக்காய் ... ... | நெய்பால்தயிர் |
| யானைதிப்பிலி ... ... | பழரசம் |
| கெந்தகம் ... ... ... | தேன்கற்கண்டு |
| கஞ்சா ... ... | கசகசா பாதம்பருப்பு |
| வள்ளிகிழங்கு ... ... | சர்க்கரை |
| கோரோசனை ... ... | பாதம்பிசின் |
| வால்மிளகு ... ... | ரூமிமஸ்தகி |
| சேமைகிழங்கு ... ... | புளி |
| அவரைக்காய் ... ... | குல்கந்து |
| சிறுலவங்கபட்டை ... ... | அசாரூன் |
| சித்திரமூலம் ... ... | இலாமிச்சவேர் ரூமிமஸ்தகி |
| ஜாதிக்காய் ... ... | ஷர்பதேபனப்ஷா |
| ஜாதிப்த்திரி ... ... | வேலம்பிசின் |
| எருக்கை ... ... ... | நெய் பால் மோர் |
| தாமரைப்பூ ... ... ... | கற்கண்டு பன்னீர் |
| தான்றிக்காய் ... ... | தேன்சர்க்கரை |
| துத்தம் ... ... | இலந்தைப்பழம் |
| வெள்ளைப்பூண்டு ... ... | பசுநெய்பால் |
| தேங்காய் ... ... | பழச்சாறு |
| தேயிலை ... ... ... | பால்சர்க்கரை |
| திராக்ஷை ... ... | சிக்கஞ்சபீன் |
| வெள்ளரிக்காய் ... ... | சுக்குதேன்உப்பு |
| கறுப்புகசகசா ... ... ... | சோம்பு |

| 1<br>முதல்பாரா | 2<br>இரண்டாம்பாரா |
|---|---|
| கறுப்புசாயம் ... ... | வாந்திசெய்துகொள்ளவும் |
| கறுஞ்சீரகம் ... ... | பாதம்பிசின் |
| நீலிமருந்து ... ... | தேன் |
| எள்ளு ... ... ... | தேன் |
| நேர்வாளம் ... ... | கடுக்காய்வசம்பு |
| படிக்காரம் ... ... | பசும்பால் |
| பவளம் ... ... | பாதம்பிசின் |
| பச்சைப்பயறு ... ... ... | சர்க்கரைதேன் |
| பச்சைமிளகாய் ... ... | பழரசம் உப்பு ஈருள்ளி |
| பலாக்காய் ... ... ... | இஞ்சி மிளகு |
| பலாப்பிஞ்சு ... ... | கோப்பைசம்பாரம் |
| பாதரசம் ... ... ... | தேன்கற்கண்டு |
| திப்பிலி ... ... ... | சந்தனம் |
| திப்பிலிமூலம் ... ... | நெய்பால் |
| பீதரோகணி ... ... | தேன் |
| புதினு ... ... .. | பழரசம்மாசக்காய் |
| பொன் ... ... ... | தேன்கஸ்தூரி |
| பசளைக்கீரை ... ... | மிளகுசீசரகம் |
| பாதம்பருப்பு ... ... | சர்க்கரை |
| பூச்சக்கரகிழங்கு ... ... | அனிசூன் |
| மிளகாய் ... ... ... | புளிநெய் |
| முத்து ... ... ... | பவளம் |
| முருங்கைபிஞ்சு ... ... | பால்நெய் |
| வெந்தயம் ... ... ... | தேன் |
| ரேவற்சினி ... ... | விளாம்பிசின் |
| பெருலவங்கபட்டை ... ... | பாதம்பிசின் |
| லவங்கபத்திரி ... ... | ருமிமஸ்தகி |
| கத்தரிக்காய் ... ... | நெய் |
| வாயுவிளங்கம் ... ... ... | பசுநெய் |
| சாம்ராணி ... ... ... | கசகசா |
| சுராககாரம் ... ... | பாதம்பிசின் |
| மிளகு ... ... ... | நெய்வெண்ணை |

## சங்கேதவஸ்துக்களின் நாமங்கள்.

லவணமென்று வந்தஇடத்தில் சைந்தலவணம் சேர்க்க வேண்டியது.

த்விலவணம், சைந்தலவணம், சவ்வர்சலவணம்.

திருலவணம், சைந்தலவணம், சவ்வர்சலவணம், பிடாலவணம்.

சதுர்லவணம், சைந்தலவணம், சவ்வர்சலவணம், பிடாலவணம், சமுத்திரலவணம்.

பஞ்சலவணம், சைந்தலவணம், சவ்வர்சலவணம், பிடாலவணம், சமுத்திரலவணம் காசலவணம்.

திரிகடுகு சுக்கு திப்பிலி மிளகு.

திரிபலாதி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய்.

திரிபத்திரி, லவங்கபத்திரி, ஜாதிபத்திரி, தாளிச்சபத்திரி.

திரிசாதம், ஏலம், லவங்கபட்டை, லவங்கபத்திரி.

சதுர்ச்சாதம், ஏலம், லவங்கபட்டை, லவங்கபத்திரி, நாகேசரம்

க்ஷத்வயம், சர்ச்சக்ஷாரம், யவக்ஷாரம்.

திரிக்ஷாரம், சர்ச்சக்ஷாரம், யவக்ஷாரம், வெரிகாரம்.

குறுபஞ்சமூலம், வில்வவேர், காட்டுசிறு வெள்ளாமணக்குவேர். குமுள்ன்வேர், கிளாவேர், நெல்லிவேர்.

துர்ணபஞ்சமூலம், பயர்தெர்ப்பை, கொருக்கை, கரும்பு, காவயம்புல்.

பஞ்சகோலம், சுக்கு, சவ்வியம், மோடி, திப்பிலி, சித்திரமூலம்.

கர்மாபஞ்சகம், கொன்றை, கோரை, கடுக்காய், கடுகுரோகணி, திப்பிலிமூலம்.

தா்ன்யபஞ்சகம், வில்வபிஞ்சு, வெட்டிவேர், கொத்துமல்லி, சுக்கு, கோரை.

நக்ரோதாதிகனம், ஆலமரம், மாமரம், இச்சுமரம், அரசமரம், அத்திமரம்.

ஷடூஷணம், பஞ்சகோலத்துடன், மிளகைச்சேர்த்தால், ஷடூஷணமாம்.

அஷ்டகவர்க்கம், காகோளி, க்ஷீராகாகோளி, உருதி, மஹாஉருதிமேதம், மஹாமேதம், ஜீவகம், ருஷபகம்.

அஷ்டமூலம், ஆடாதொடை, கெக்கரி, சீந்தில், துளசி, பற்பாடகம், பேய்ப்புடல், விஷ்ணுகிராந்தி, சித்தாமுட்டி

தசமூலம், சிறுஏலம், பெருஏலம், பெருமல்லி, மோர்மல்லி, நெருஞ்சி, வில்வம், நெல்லி, குமுளம், காட்டுசிறுவெள்ளாமணக்கு, கிளாச்செடி.

அஷ்டதசமூலம், அஷ்டமூலமும், தசமூலமும்சேர்க்க, அஷ்டதசமூலமாம்.

சுக்குதுவயம். சுக்கும் சிவனார்வேம்பு இவ்விரண்டும் சேர்ந்து சுக்குதுவயமாம்.

திப்பிலிதுவயம். திப்பிலி யானைத்திப்பிலி.

மிளகுதுவயம். மிளகு வெள்ளைமிளகு.

கடுகுதுவயம். கடுகு வெள்ளைகடுகு.

ரோஹணிதுவயம். கடுகுரோகணி பீதரோகணி.

நொச்சிதுவயம். கருநொச்சி வெண்ணொச்சி.

உர்கந்ததுவயம். ஓமம் கரும்ஓமம்.

சீரகதுவயம். சீரகம் கருஞ்சீரகம்.

சித்திரமூலதுவயம். வெள்ளைகொடிவேலி கருப்புகொடிவேலி அல்லது சிகப்புகொடிவேலி.

புனர்னவாதிரியம். சாரடை கரசலாங்காணி சிகப்புகரசலாங்காணி.

மஹாரசம் எனக்கூருமிதுத்தில் அபிகேகு, வைகிராந்தம், மாக்ஷிகம, விமலம், சலாசத்து, மயில்துத்தம், உள்ளிப்பாஷாணம், கவுரிப்பாஷணம்.

உபசரம், சந்தனம், செகுருக்கல், அன்னபேதி, படிக்காரம், தாளகம், மனோசிலை, அஞ்சனக்கல், கம்குஷ்டம், சாதார்ணரசம், சம்பில்லம், கவுரிப்பாஷாணம், நவாச்சாரம், கிளிஞ்சல், அக்கினிச்சாரம், மைசாக்ஷி, இங்குலிங்கம், வெள்ளிக்காரம்.

இச்சங்கேதங்களை அனேகநூற்களில் வெவ்வேறு விதமாய் கூறியிருக்கினும் சிலகிரந்தங்களில் முற்கூறியபடி செப்பியிருக்கின்றது சர்வஜன சம்மதமாய் இவ்வஸ்துக்களின் சங்கேதங்களை இக்கிரந்தத்

தில் ஒருவாறு கூறலாயிற்று இச்சங்கேதங்களில் வஸ்துக்களின் பெயர் பேதமுண்டானால் இரண்டாம்பாகத்தின் ஔஷதபாகத்தில் தெளிவாய்க்கூறுவாம்.

பஞ்சபூதத்திற்கும்உலோகஉபமானம், உலோகங்களில்ப்ருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் இவ்வைந்தும் பஞ்சபூதமாகவின் இவ்வொவ்வொரு பூதங்களுக்கும் உலோகங்களில் ஒவ்வொன்றை உபமானமாக முன்னோர்கள் கூறியிருக்கின்றவாறு கீழ்க்காண்க.

ப்ருதிவி, பொன், அப்பு, கருவங்கம், தேயு, தாம்பூரம், வாயு, அயம், ஆகாசம், நாகம், சூதம்.

பூலோகத்தில் ப்ருதிவி, மண், அப்பு, ஜலம், தேயு, அக்கினி, வாயு, காற்று, ஆகாசம் வெட்டவெளி.

தேகத்தில் ப்ருதிவி மலம், அப்பு மூத்திரம், தேயு இரத்தம், வாயு, உமிழ், நீர், ஆகாயம் சுக்கிலம்.

பாஷாணத்தில் ப்ருதிவி தாளகம், அப்பு சவ்வீரம், தேயு இலிங்கம், வாயு வெள்ளைபாஷணம், ஆகாயம் கெந்தகம்.

இலவணத்தில். ப்ருதிவி சமுத்திரலவணம், சயிந்தலவணம், வளையலுப்பு.

அப்பு திராக்ஷலவணம், தேயு சவுட்டுப்பு, சுறுக்காரம் கர்ப்பூரம், வாயு வெள்ளிக்காரம், துத்தம், படிக்காரம், ஆகாயம், இரசகர்ப்பூரம், வாளம்.

பாஷாணபேதகத்தில். ப்ருதிவி தோட்டிப்பாஷாணம், மிருதார்சிங்கு, பகழவேர், தீமுரிப்பாஷாணம் அப்பு கௌரிப்பாஷாணம், சங்குப்பாஷாணம், அஸ்வ தந்தப்பாஷாணம், குக்குடக்கெந்தகம், தேயு மனேசிலை, கெந்தகம், சவ்வீரம், அரிதாரம், வாயு ரசகந்தபாஷாணம், இங்குலிங்கம், ஆகாயம் சூதம்.

உபரசத்தில். ப்ருதிவி கர்ப்பூரசலாசத்து, அயக்காந்தம், நாகம், இராஜவர்மம் அப்பு சங்கு, கோழிமுட்டை, சிளிஞ்சல், நண்டு ஓடு, தேயு எலும்பு, மயிலிறகு, வெள்ளிக்காரம், வாயு சாஸ்திரபேதி கல்நார், அன்னபேதி, ரோமம், ஆகாயம், துத்தம்.

முற்கூறியவைகள் பஞ்சபூதற்திற்கு உபமானமெனக்காண்க.



# அநுபானவஸ்துக்களின்

## விபரம்.

இதன் கீழ்கூறும் வியாதிகளை அதிற்சொல்லும் சரக்குகளைக் கொண்டும் அந்தந்த ரோகங்களுக்கு கொடுக்கும் ஔஷதங்களோடு கீழ்காணும் சரக்குகளை கியாழமாயும் கலிக்கமாயும் கிருதமாயும் தைலமாயும் நசியமாயும் லேகியமாயும் லேபனமாயும் ரசாயனமாயும் தூபமாயும் ஸ்நானமாயும் சமயோசிதமாய் செய்து உபயோகித்துவர அவ்வவ்வியாதிகளுக்கு செய்யும் ஔஷதத்திற்கு அதிகபிரையோஜனத்தைக்கொடுக்கும்.

வாதரோகத்திற்குஉபயோகப்படும் சரக்குகள்.

தேவதாரி, சமூலம், சித்தாமுட்டிச்சமூலம், கரும்பின்வேர், ஏலரிசி, மஞ்சள், கருநொச்சி, சாரடை, காக்கரட்டான்இலை, எள்ளெண்ணெய், பருத்திக்கொட்டை, வெள்ளைச்சிவதைவேர், பஞ்சலவணம்.

பித்தரோகத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்.

பொன்னாங்காணி, பூச்சக்கிரக்கிழங்கு, வெள்ளைச்சர்க்கரை, திராக்ஷை, குருவேர், வெட்டிவேர், நன்னாரிவேர், பேரீச்சம்பழம், ஆடாதொடை, சீந்தில், ஸ்கிரீகந்தம், பச்சைகர்ப்பூரம், வேம்பு, ஆல், அரசு, அத்தி, கோரைக்கிழங்கு, பாச்சிவேலி, மாதளம்பழம், இளநீர், வாழைப்பழம், வெள்ளரிப்பழம், முருங்கைப்பூ.

இரத்தவாதரோகத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்.

தும்புராஷ்டகம், மஞ்சள், தேவதாரி, சிற்றாமுட்டி, வெட்டிவேர், தசமூலம், சலாசத்து, பூச்சக்ரக்கிழங்கு, காசினிகீரை, சீந்தில், சிவனார்வேம்பு.

சீதபித்தரோகங்களுக்கு உபயோகப்படும் சரக்குகள்.

மிளகாய்பொடி, கடுகு, புறத்தெண்ணெய், சைந்தலவணம், ஸ்திரீகந்தம், நெய், வெட்டிவேர், சீந்தில்.

இரத்தபித்தரோகத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்.

ஆடாதொடை, பற்பாடகம், வெட்டிவேர், ஸ்ரீகந்தம், தேங்காய்பூ, கோரைகிழங்கு, திராக்ஷை, திரிபலாதி, கச்சூர்காய், மாதளம்

பழம், தண்ணீர்விட்டான்கிழங்கு, பால், நெய், பொன்னாங்காணி, தேன், ஆலங்கொழுந்து, ஆலவிழுதின்துளிர், சர்க்கரை.

கபரோகத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்.

சைந்தலவணம், திரிகடுகு, கடுக்காய், கோமூத்திரம், மரமஞ்சள், திப்பிலிமூலம், வேதாரி, தாளிச்சப்பத்திரி, சித்திரமூலம், குருவேர், தேன்.

காசரோகத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்.

கண்டுபரங்கி, திரிகடுகு, சடாமாஞ்சில், மஞ்சள், வசம்பு, மோடி, ஓமம், சித்திரமூலம், ஈருள்ளி, கருஞ்சீரகம், கருநொச்சி, தசமூலம், கடுகு, திரிபலாதி, தும்புராஷ்டகம், தேவதாரம், மனோசிலே, ஆனைதிப்பிலி, சைந்தலவணம்.

க்ஷயரோகத்திற்குஉபயோகப்படும் சரக்குகள்.

தாளிக்சபத்திரி, பெருகாயம், முள்ளாங்கி, கடுகுரோகணி, நீலிசாதிக்காய், கரிசலாங்காணி, ஆடாதொடை, பருத்திஇலே, பூச்சக்கிரக்கிழங்கு, சங்கம், கொள்ளு, குங்கிலியம், வெள்ளைச்சங்கம்வேர், திராக்ஷை, பால், சர்க்கரை.

சுவாசகாசத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்.

ஆவின்நெய், வெள்ளாட்டின்பால், திராக்ஷை, பசுவின்வெண்ணெய், அமுக்குராக்கிழங்கு.

சகலஜ்வரத்திற்கும் உபயோகப்படும் சரக்குகள்.

கோரைகிழங்கு, பற்பாடகம், கொத்துமல்லிவிரை, நிலவேம்பு, சுக்கு, சீந்தில், திராக்ஷை, தசமூலம், வேம்பு, வெட்டிவேர். குருவேர், ஸ்திரீகந்தம், முத்துக்கொட்டைச்செடி, தண்ணீர்விட்டான்கிழங்கு, திரிபலாதி, அரசன்பட்டை, தேவதாரம், மோடி, திப்பிலி, கடுகுரோகணி, கண்டுப்பரங்கி, பேய்ப்புடல், முலேப்பால். உருத்திராக்ஷம், கோரோஜனை ஆடாதொடை, சர்க்கரை, தேன்.

சகலசீதஜ்வரத்திற்கும் உபயோகப்படும் சரக்குகள்.

மரமஞ்சள், திரிகடுகு, சீரகம், வெள்ளைஈருள்ளி, விஷ்ணுகிராந்தி, துளசி, நிலத்துளசி, இலவங்கப்பத்திரி, கருநொச்சி, கண்டுபரங்கி.

மார்நோய்க்கு உபயோகப்படும் சரக்குகள்.

தசமூலம், பெருங்காயம், கொட்டைமுத்துசெடி, தேவதாரம், சுக்கு, வெள்ளைச்சாரடை, கடுக்காய், ஆவின்நெய், பஞ்சலவணம்.

மகோதரத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்.

சிறுஞ்சிவதை, வெள்ளை ஈருள்ளி, வாளக்கொட்டை, சதுரக்கள்ளி, கிலுகிலுப்பை, பெருங்காயம், கடுக்காய், முத்துக்கொட்டை, பசுங்கோமையம்.

இரத்தகுன்மரோகத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்.

புங்கைமரம், சாரடை, வெள்ளைச்சாரடை, பெருங்காயம், சித்திரமூலம், நவாச்சாரம், வெள்ளை ஈருள்ளி.

சகலஉதிரரோகங்களுக்கும் உபயோகப்படும் சரக்குகள்.

வாளம், சங்கங்குப்பி, பெருங்காயம், ஈருள்ளி, திரிபலாதி, கடற்கிளிஞ்சல், பஞ்சலவணம், முத்தெண்ணெய், விஷ்ணுகிராந்தி, சித்திரமூலம், திப்பிலிமூலம், சுக்கு, பசுங்கோமயம்.

சூலைரோகத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்.

வெள்ளைச்சாரடை, சித்திரமூலம், திப்பிலிகட்டை, கடுக்காய், கருநொச்சி, வசம்பு, எள்நெய், ஆமணக்கெண்ணெய், பெருங்காயம், திரிபலாதி, பஞ்சலவணம்.

அதிசாரரோகத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்.

திப்பிலி, அதிவிடையம், மஞ்சுஷ்டி, சுக்கு, சாதிக்காய், கோரைக்கிழங்கு, மாங்கொட்டை, லவங்கம், வாழைப்பூ, சீரகம், மாங்கொழுந்து, அத்திப்பிஞ்சு மாதளம்பிஞ்சு, கெச்சக்காய், ஆட்டின்தயிர், தேன்.

கிராணிரோகத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்

தேவதாரம், மோர், ஆவாரைப்பிலை, வசம்பு, சீரகம், வெள்ளைச்சாரடை, சாரடை, மிளகு, பெருங்காயம், பஞ்சலவணம்,

அதிசாரரோகத்திற்கும் கிராணிரோகத்திற்கும்

உபயோகப்படும் சரக்குகள்.

மந்தாக்கினியைநீக்கி ஜாடராக்கினியை உண்டாக்கும்.

இரத்தமூலரோகத்திற்கு உபயோகப்படும் சரக்குகள்.

கோரைகிழங்கு, சைந்தலவணம், வெங்காரம், ஆவின்வெண்ணெய், பசளைக்கீரை, கருணைக்கிழங்கு, தென்னம்பூ, காட்டுக்கருணை, வயல்நத்தை, பெருங்காயம், ஈருள்ளி, காராக்கருணை.

இரத்தபேதிரோகத்துக்கு உபயோகப்படும் சரக்குகள்.

குருவேர், சீந்தில், நன்னாரிவேர், பச்சைகற்பூரம், தாமரைப்பூ, கோரைக்கிழங்கு வேப்பங்கொழுந்து. துளசி, நெய், இலுப்பைப்பூ, அரசம்பட்டை, வெள்ளைப்பாதிரிக்கிழங்கு, காசிக்கட்டி, கற்கடசிங்கம், கடுக்காய்பூ, அபின், பெருங்காயம், படிக்காரம், ஜாதிக்காய், கஞ்சா, வெந்தயம்.

மூத்திரபந்தரோகத்தை நிவர்த்திக்கும் சரக்குகள்.

நவாச்சாரம், வெங்காரம், படிக்காரம், கோழிக்கல் இவைகளின்பற்பமும், உளுந்து பாஷாணபேதி, வெள்ளரிவிரை, சுரைவிரை, சுரத்தண்டு, நீர்முள்ளி, பொட்டிலுப்பு, காட்டுச்சிறுகீரைவேர், தாமரைத்தண்டு, கர்ப்பூரசிலாசத்து, முருங்கைவேர், இளநீர், பருப்புக்கீரைவிரை, கொட்டைப்பாக்கு, தென்னம்பூ, முத்துக்கொட்டை, துரிசுபற்பம், லவுங்கயாழம்,

பிரமேகரோகநிவர்த்தி சாக்குகள்.

ஆவாரை, பருத்திக்கொட்டை, சீந்தில், கோவைவேர், முருங்கை, திரிபலாதி, வெள்ளைகுண்டுமணி, வேப்பம்பிஞ்சு, நொச்சி, வெள்ளைச்சிவதைவேர், காந்தப்பற்பம், அப்பிரேக்குபற்பம், குங்கிலியம், கர்ப்பூரசலாசத்து, தாமரை, பொன்னாங்காணி, மூங்கிலிலை, எள்நெய், மோர், ஆனைநெருஞ்சி, துத்தி, அம்மாம்பச்சரிசிசமூலம்.

அண்டவாதரோகநிவர்த்தி சரக்குகள்.

பெருங்காயம், சைந்தலவணம், ஈருள்ளி, கெச்சைக்காய்பருப்பு, கெச்சைக்காயிலை, கெக்சைக்காய்எண்ணை, முத்தெண்ணை, வசம்பு, வெள்ளைச்சாரடை, சித்திரமூலம், முட்டைஓடு.

காமாலை ரோகநிவர்த்தி சரக்குகள்,

சுக்கு, பேய்ப்புடல், கடுகுரோகணி, கோரைக்கிழங்கு, பொன்னாங்காணி, பச்சைகர்பூரம், தண்ணீர்விட்டான்கிழங்கு, பசுபால், நெய், எருமைமோர், பாசிப்பயறு, மான்கொம்பு, பீதரோகணி, வெள்ளாட்டின்ஈரல், கிருஷ்ண துளசி, அயம்.

பித்தபாண்டுரோகருவர்த்தி சரக்குகள்.

திரிகடுகு, சித்திரமூலம், கோரைக்கிழங்கு, அதிமதுரம், வாய்விளங்கம் உலோகபற்பம், எருமைமோர், கரசலாங்காணி, மஞ்சல், மரமஞ்சல், வெள்ளாட்டின்மூத்திரம், பசுவின்கோமயம், இரும்புஅரைபெட்டி, மண்டூரம், எழுகு.

விரியவிர்த்தியுண்டாக்கும் சரக்குகள்.

பாதரசம், தங்கபற்பம், கெந்தகம், அபிரேக்குபற்பம் வெள்ளைச்சாரடை, உளுந்து, கடுக்காய், தேவதாரம், அபின், விளாம்பிசின் ஜாதிக்காய், பூச்சக்ரக்கிழங்கு, முருங்கைப்பூ, முருங்கைப்பிஞ்சு, முருங்கைவித்து, முருங்கயிலை, பொன்னாங்காணி, தண்ணீர்விட்டான்கிழங்கு, தாமரைப்பூ, ஆலவ்விரை, சர்க்கரை, கரும்புரசம், பசும்பால் நெய், வாழைப்பழம், இளநீர், திராகைஷ, குளவித்தேன், கர்ச்சூரக்காய், கோதுமைமாவு. கோதுமை, திரிகடுகு,

வமனரோகநிவர்த்தி சரக்குகள்.

பச்சைகர்ப்பூரம், மாதளம்பழம், இலந்தைப்பழம், மாங்கொழுந்து, சர்க்கரை, தேன், இலந்தைக்கொட்டை, இளநீர், விளாம்பழம் சுக்கு, சீரகம், பால்,கொத்துமல்லிவிரை, மயிலிறகு, ஏலரிசி, இஞ்சி.

கபாலரோகத்தை நிவர்த்திக்கும் சரக்குகள்.

அதிமதுரம், சர்க்கரை, குங்குமப்பூ, குருவேர், சங்கு, கஸ்தூரி திரிகடுகு, கரசிலாங்காணி, சிற்றுமுட்டி, வாய்விளங்கம், மரமஞ்சள், தாமரை ஜாதிக்காய், எள்நெய், பசும்பால், பசுநெய்.

சீதபேதியைநிவர்த்திக்கும் சரக்குகள்.

ஜாதிக்காய், அபின், வெந்தயம், மாசக்காய், கஞ்சா, சுக்கு, மாதுளைஓடு, மாதுளம்பிஞ்சு, தேன், மாங்கொட்டை, நெய். வெங்காயம்.

